# நாள் முழுவதும்

காலை வேளையில்



# புத்துணர்ச்சி

பிற்பகலில்



# அளிக்க...

இரவில்






குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்



ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ணநிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

இராஸ்மிக் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை    HBP.8-X30 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 52

1953 ஜூலை 26

விஜய ௵
ஆடி 11௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




# நடேஷ் ஆர்ட் பிக்சர்ஸ்

# அன்பு

ப்ரொட்யூஸர் & டைரக்டர்
**M.நடேசன்**



நடிகர்கள் :

T.R.ராஜகுமாரி • T.S.பாலையா
லலிதா • K.ராமசாமி
பத்மினி • K.தங்கவேலு
S.பத்மா • D.துரைசாமி
ருஷ்யேந்திரமணி • மஹாலிங்கம்
K.S.ஆதிலக்ஷ்மி • ஷண்முகம்
T.S.ஜெயா • சுந்தரேசன்

**சிவாஜி கணேசன்**

ஜூலை 24உ முதல்
தமிழ்நாடெங்கும்

EP. வசனம் விந்தன் | சங்கீதம் T.R.பாப்பா | ஸ்டுடியோ : நியூடோன் & சிடாடல்




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 52

# ஐந்து கோடி பதில்கள்!

"நல்ல அரசாங்கம், நேர்மையான அரசாங்கம், திறமையான அரசாங்கம், பாரபட்சமற்ற அரசாங்கம், நிலைபெற்ற அரசாங்கம் வேண்டுமா?" என்ற கேள்விக்கு ஐந்து கோடி பதில்கள் "வேண்டும்! வேண்டும்! அவசியம் வேண்டும்!" என்று கிடைத்திருக்கின்றன. வெறும் வாய்வார்த்தை பதில்கள் அல்ல; அரை குறையான பதில்கள் அல்ல; சந்தேகத்துடன் கூடிய தொண்டையில் விக்கும் பதில்கள் அல்ல. ஒவ்வொன்றும் கணீர், கணீர் என்று ஒலிக்கும் பதினாறு அணா பெறுமானமுள்ள முழு ரூபாய் பதில்கள்.

சென்னை சர்க்காரின் சார்பாக ராஜாஜி ஐந்து கோடி ரூபாய் கடன் கோரினார். பொதுமக்கள் ஐந்து கோடி ரூபாய்க்கு மேலே இரண்டரைக் கோடி சேர்த்துக் கொடுத்திருக்கிறார்கள். ஐந்து கோடி ரூபாய் மட்டும் வைத்துக் கொண்டு மிச்சத்தை சர்க்கார் திருப்பிக் கொடுக்கும்படியான நிலைமையை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். சர்க்காரிடம் ஜனங்களுக்குள்ள மதிப்பையும் நம்பிக்கையையும் ஐயந்திரிபுக்கிடமின்றிக் காட்டுவதற்கு இதைக் காட்டிலும் நல்ல வழி கிடையாது. அதைப் பொது மக்கள் உபயோகப்படுத்திக் கொண்டது பற்றிப் பெரு மகிழ்ச்சி அடைகிறோம்.

சென்ற ஆண்டிலும் ஏறக்குறைய இதே காலத்தில் சென்னை சர்க்கார் ஐந்து கோடி ரூபாய் மக்களிடம் கடன் கேட்டார்கள். கேட்டதற்கு மேலேயே கிடைத்தது.

மொத்தம் ஆறு கோடி ரூபாய்க்குமேல் கிடைத்து விட்டது.

ஆனால் சென்ற வருஷத்தில் இருந்த சூழ்நிலை வேறு என்பதையும் இந்த வருஷத்தியச் சூழ்நிலை முற்றும் வேறு என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

சென்ற ஆண்டில் ராஜாஜி முதன் மந்திரியாகிக் கம்யூனிஸ்டு அபாயத்திலிருந்து இந்த மாகாணத்தைக் காப்பாற்றினார் என்ற எண்ணம் எங்கும் பரவி யிருந்தது. அது இப்போது பழைய கதை ஆகிவிட்டது. "பொது ஜனங்களுடைய ஞாபக சக்தி மிகவும் குறைவானது" என்று பழமொழியே உண்டு அல்லவா?

அம்மாதிரியே, "ராஜாஜி அதிகாரத்துக்கு வந்து கண்ட்ரோலை எடுத்து விட்டார்" என்ற புகழும் அச்சமயம் எங்கும் வியாபித்திருந்தது. அது நடந்தும் நாளாகி விட்டபடியால், கண்ட்ரோல் அமுலிலிருந்த காலத்தில் ஜனங்கள் பட்ட கஷ்டங்களை யெல்லாம் மறந்து விட்டார்கள். இப்போது "அரிசி விலை விஷம்போல் ஏறுகிறது" "நியாயவிலைக் கடைகள் போதவில்லை" என்னும் புகார்களைத்தான் அதிகமாகக் கேட்கிறோம்.

போதாததற்குப் புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் வந்திருக்கிறது. அதை வியாஜமாக வைத்துக் கொண்டு தீய துவேஷ சக்திகள் கோர தாண்டவம் ஆடி வருகின்றன.

ஆந்திர மாகாணப் பிரிவினை ஒன்று குறுக்கிட்டு, அக்டோபருக்குப் பிறகு அரசியல் நிலைமை எப்படி இருக்குமோ என்ற கேள்வியைக் கிளப்பி விட்டிருக்கிறது.

அரசியல் சூழ்நிலைதான் இப்படி இருக்கிறது என்றால், பொருளாதாரத் துறையில் இன்னும் அதிக குழப்பமான நிலைமை குடி கொண்டிருக்கிறது.

பண மார்க்கெட்டில் பணப் புழக்கம் சென்ற ஆண்டை விடக் குறைவு என்று சொல்கிறார்கள். எங்கும் 'பணத்தட்டு' என்ற பேச்சையே கேட்கிறோம். வர்த்தகர்கள் "வியாபாரம் குறைந்து விட்டது" என்கிறார்கள். வெள்ளித்திரைக்காரர்கள் "ஸினிமா அடியோடு படுத்து விட்டது" என்கிறார்கள். விற்பனை வரி வருமானம் மிகவும் குறைந்து விட்டது என்பது பிரத்யட்சமான நிலைமை.

அன்றியும், சென்ற வருஷத்தில் சென்னை சர்க்கார் கடன் கேட்க யத்தனித்த போது, இந்திய சர்க்காரின் நிபுணர்கள் "ஐந்து கோடி ரூபாய் கிடைக்காது; கடன் திட்டம் தோல்வி அடையும்" என்று துக்கிரி வாக்குச் சொல்வதுடன் திருப்தியடைந்தார்கள். இந்திய சர்க்கார் அச்சமயம் கடன் வாங்க முன்வரவில்லை. மற்ற எந்த மாகாணமும் மூன்று கோடிக்கு மேல் கடன் கேட்கத் துணியவில்லை.

இம் முறை இந்திய சர்க்கார் முந்திக் கொண்டு 75 கோடி ரூபாய் கடன் கேட்டுப் பெற்றுக் கொண்டார்கள். அதற்குப் பிறகுதான் மாகாண சர்க்கார்கள் கடன் திட்டம் வெளியிட அனுமதி தந்தார்கள். சென்னை, பம்பாய், உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம், மைசூர், திருவாங்கூர் முதலிய பத்து மாகாண சர்க்கார்களும் ஒரே சமயத்தில் கடன் திட்டம் வெளியிடும்படி செய்தார்கள்.

சென்னை சர்க்காரின் கடன் போன வருஷத்தில் வெற்றியடைந்த அநுபவத்தை வைத்துக் கொண்டு, இவ்வருஷத்தில் பம்பாய், வங்காளம், உத்தரப் பிரதேச சர்க்கார்களும் ஐந்து கோடி கடன் கேட்டார்கள்.

சென்னை நீங்கலாக மற்ற ஒன்பது மாகாணங்களும் இருபத்து மூன்று கோடி ரூபாய் கடன் கேட்டார்கள்.

இத்தகைய பல காரணங்களினாலும் சென்னை சர்க்காரின் கடன் திட்டத்துக்குப் பிரதிகூலமான சூழ்நிலை இவ் வருஷம் ஏற்பட்டிருந்தது. இதை எண்ணியே, ஜூலை 15உ முதல் 31உ வரையில் கடன் பெற்றுக் கொள்ளப்படும் என்று முன் ஜாக்கிரதையாக அறிவிக்கப்பட்டது போலும்.

ஆனால் மக்கள் தங்கள் ஆதரவைத் தெரிவிப்பதற்கு அத்தனை நாள் காத்திருக்க விரும்பவில்லை.

20ந் தேதிக் குள்ளேயே ஏழரைக் கோடி ரூபாய்க்கு மேல் வசூலாகி விட்டது.

பிரியப்போகும் ஆந்திர மாகாணத்துக்கென்று குறிப்பிட்டுக் கடன் கொடுக்கலாம் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதன்படி, இரண்டு கோடி ரூபாய் புதிய ஆந்திர ராஜ்யத்துக்கென்றும், எஞ்சி நிற்கும் சென்னைக்கு மூன்று கோடி ரூபாய் என்றும் திட்டம் வகுத்திருந்தார்கள்.

ஆனால் எஞ்சியுள்ள சென்னை ராஜ்யத்திற்காக மட்டுமே ஏறக்குறைய ஐந்து கோடி ரூபாய் வசூலாகி யிருக்கிறது.

எனவே, இனிக் கடன் கொடுக்கலாம் என்று எண்ணி யிருந்தவர்கள் மைசூர் ராஜ்யத்துக்குக் கொடுத்து உதவும்படி ராஜாஜி வேண்டுகோள் விடுப்பது சாத்தியமாயிற்று!

சென்னை சர்க்காருக்கு இது ஒரு மகத்தான வெற்றி என்று சொன்னால், அதில் அணுவளவும் மிகை கிடையாது.

ராஜாஜியை முதன் மந்திரியாகக் கொண்ட சர்க்காரிடம் இவ்வாறு பொது மக்கள் தங்களுடைய அபரிமிதமான அபிமானத்தையும் பூரண நம்பிக்கையையும் தெரிவித்திருக்கிறார்கள்.

ராஜாஜி முதன் மந்திரியா யிருக்கும் வரையில் இந்தப் பேரபிமானத்துக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாகச் சென்னை அரசாங்கம் நடந்து வரும் என்பதில் சந்தேகமில்லை.

எக்காரணத்திலாவது ராஜாஜி முதன் மந்திரி பதவியிலிருந்து விலகிக்கொள்ள நேர்ந்தால், அதற்குப் பிறகு ஏற்படும் சென்னை அரசாங்கமும் இதே மாதிரி நேர்மையாகவும் திறமையாகவும் சர்க்காரை நடத்திப் பொதுமக்களின் அபிமானத்துக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாக வேண்டும் என்று விரும்புகிறோம்.

# புகையிலைச் சலுகை

ஈழ நாட்டிலுள்ள பழந்தமிழ்க் குடி மக்களுக்கும் இந்திய நாட்டுக்கும் உள்ள உறவு நேற்று முன்னாள் நேர்ந்ததன்று; நெடுங் காலத்துத் தொடர்பு. ஈழத்துத் தமிழர்கள் தங்கள் நாட்டைச் 'சேய் நாடு' என்றும், இந்திய நாட்டைத் 'தாய் நாடு' என்றும் அழைப்பவர்கள்.

யாழ்ப்பாணப் பகுதியில் தமிழ் நன்றாக வளர்கிறது; அத்துடன் சேர்ந்து புகையிலையும் செழித்து வளருகிறது. அங்குள்ள தமிழர்கள் பெரும்பாலும் விவசாயிகள்; உழைப்பாளிகள். பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களா யிருப்பவர்கள். பள்ளிக்கூடம் முடிந்ததும் அவரவர்களுடைய தோட்டங்களுக்குச் சென்று உழைத்துப் பாடுபடுவதைக் காணலாம்.

யாழ்ப்பாணத்தில் தழைத்து விளையும் புகையிலைக்கு மலையாளத்தில் நல்ல கிராக்கி. ஆகையால் திருவாங்கூர் - கொச்சியில் ஏராளமாக இறக்குமதியாவது வழக்கம். அதற்கு ஒரு பெரிய இடையூறு சமீபத்தில் ஏற்பட்டது.

திருவாங்கூர் - கொச்சி தனிப்பட்ட சமஸ்தானங்களா யிருந்த வரையில், யாழ்ப்பாணப் புகையிலையை மிகச் சொற்பமான இறக்குமதி வரியுடன் அனுமதித்து வந்தார்கள். திருவாங்கூர் - கொச்சி இந்தியாவுடன் இணைந்த பிறகு, தேசத்துக்கே பொதுவாகவுள்ள இறக்குமதி வரி விகிதத்தை யாழ்ப்பாணப் புகையிலைக்கும் விதிப்பதுதானே முறை! அப்படிச் செய்ய இந்திய சர்க்கார் முன் வந்தது யாழ்ப்பாணத்தின் விவசாயப் பொருளாதாரத்தையே பாதிக்கும் காரியமாக இருந்தது.

ராத்தலுக்கு எட்டணா வீதம் இருந்த இறக்குமதி வரியைத் திடீரென்று எட்டு ரூபாய்க்குத் தூக்கினால், யாழ்ப்பாணத்துப் புகையிலை இறக்குமதியை அடியோடு தடுப்பது போலத்தான் அல்லவா!

இந்தச் சங்கடமான நிலைமை யாழ்ப்பாணப் பகுதியிலுள்ள விவசாயிகளான தமிழர்களைப் பெரிதும் பாதித்தது. புகையிலை சாகுபடியான பூமியில் வேறு பயிர் செய்வது சுலபம் அல்ல; அவ்வளவு லாபகரமானதும் அல்ல. வேறு நாட்டுக்கு அனுப்புவதும் முடியாது. ஏனெனில், யாழ்ப்பாணத்துப் புகையிலை சுருட்டு - சிகரெட் செய்வதற்கு ஏற்றதன்று. மெல்லுவதற்கே உகந்தது. புகையிலை மெல்லுகிறவர்கள் திருவாங்கூர் - கொச்சியில்தான் அதிகம். அதிலும், யாழ்ப்பாணப் புகையிலையை மென்று பழக்கப்பட்டவர்கள் வேறு புகையிலையை விரும்பமாட்டார்கள்.

இலங்கை சர்க்காருக்கும் இந்திய சர்க்காருக்கும் வேறு பல பிரச்னைகளில் மாறுபாடுகள் இருந்து வருவதால், இந்தப் புகையிலைப் பிரச்னை நல்லபடியாகத் தீருமா என்னும் ஐயம் பலருக்கும் ஏற்பட்டிருந்தது. அதிர்ஷ்டவசமாக, எந்தப் பிரச்னையையும் சுமுகமாகப் பேசித் தீர்க்கக் கூடியவரான தமிழ் அறிஞர் ஸ்ரீ எஸ். நடேசன் அவர்கள் தற்சமயம் இலங்கை அரசாங்கத்தின் தபால் இலாகா மந்திரியாக இருந்து வருகிறார். அவருடைய தலைமையில் புகையிலைத் தூதுகோஷ்டி ஒன்றை இலங்கை சர்க்கார் புதுடில்லிக்கு அனுப்பி வைத்தார்கள். ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களோடு இலங்கை உணவு இலாகா உதவி மந்திரி ஸ்ரீ வி. குமாரசாமியும் மற்ற உத்தியோகஸ்தர்களும் சென்றிருந்தார்கள்.

இவர்களுடைய தூது வெற்றிகரமாக முடிந்த செய்தியை நேயர்கள் தினப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள்.

இந்திய சர்க்கார் மந்திரிகள் மற்றத் தகராறுகளை இந்தப் பேச்சு வார்த்தையில் கொண்டு வந்து

புகுத்தாமல், இலங்கைத் தூதர்களை நல்ல முறையில் நடத்தி அவர்களுடைய கோரிக்கையையும் பூர்த்தி செய்து கொடுத்தார்கள். 1500 கண்டி புகையிலை ராத்தலுக்கு எட்டணா விகிதமும், அதற்கு மேல் 700 கண்டி வரையில் ராத்தலுக்கு 12 அணா விகிதமும் குறைவான வரி விகிதத்துடன் யாழ்ப்பாணப் புகையிலையை இந்தியாவில் இறக்குமதி செய்ய அனுமதி தந்திருக்கிறார்கள். இந்தப் பெருந்தன்மையான காரியத்துக்காக யாழ்ப்பாணத் தமிழர்களுடன் சேர்ந்து நாமும் இந்திய சர்க்காரைப் பாராட்டுகிறோம்.

இந்தப் பேச்சு வார்த்தையில் இந்தியத் தொழில் இலாகா மந்திரி கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் யாழ்ப்பாணத்தாரின் கோரிக்கையை அனுதாபத்துடன் கவனித்து உதவி செய்திருக்கிறார். அவர் நேர்முகமாக இந்தப் பிரச்னையில் கவனம் செலுத்தியதனால்தான் காரியம் இவ்வளவு சமூகமாகவும் அனுகூலமாகவும் முடிந்தது.

ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களும் சரி, ஸ்ரீ டி. டி. கே. அவர்களும் சரி, புகையிலை மெல்லுவதில் உள்ள சுவாரஸ்யத்தை அறியாதவர்கள். (புகையிலைதான் 'பிரம்ம பத்திரம்' என்ற கதையை மட்டுமே கேட்டிருப்பார்கள்.) ஆயினும் அவர்கள் ஊக்கம் எடுத்து இந்தப் பிரச்னையைத் திருப்திகரமாக முடிவு செய்திருக்கிறார்கள். அவர்களுக்கு யாழ்ப்பாணத்தார் சார்பாகவும் மலையானத்தார் சார்பாகவும் நம் மனமார்ந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# நம் என்ஜினியர்கள்

தென்னாட்டு என்ஜினியர்களுக்கு இந்தியாவெங்கும் பெயரும் புகழும் உண்டு. அதைக் குறித்து நாம் பெருமிதம் அடைவதும் உண்டு. ஆனால் நம் என்ஜினியர்கள் நம் நாட்டு விவசாயிகளிடம் மட்டும் நல்ல பெயர் வாங்குவதில்லை என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது! அதற்குப் பதிலாக, வருஷா வருஷம் ஏதேனும் ஒரு தவறான காரியத்தினால் விவசாயிகளின் சாபங்களையும் வாங்கிக் கட்டிக் கொண்டு வருகிறார்கள்!

இந்த வருஷம் மேட்டூர் அணையைத் திறந்து தண்ணீர் விடுவதில் அத்தகைய பெருந் தவறு செய்திருக்கிறார்கள்.

அவசரப் பட்டுத் தண்ணீர் திறந்து விட்டுப் பிறகு வயல்களைக் காயப் போட வேண்டாம் என்று தீர்மானித்து, முன் ஜாக்கிரதையாக "ஜூலை மீ 5 உ தான் தண்ணீர் விடுவோம்" என்றார்கள். இது சரி. விவசாயிகளும் பொறுத்திருந்தார்கள்.

பெரியோர்களுடைய தவத்தினாலும் நாம் எல்லாரும் செய்த பிரார்த்தனையினாலும் இயற்கைத் தேவி இவ்வருஷம் கருணை புரிந்தாள். மேற்குக் கடற்கரையில் தென் மேற்குப் பருவ மழை நன்றாகப் பெய்தது. குடகில் கொட்டு கொட்டு என்று மழை கொட்டியது. கிருஷ்ணராஜ சாகரம் நிரம்பி வழிந்தது. மேட்டூரில் தண்ணீர் மட்டம் 115 அடி வரையில் போயிற்று. இவ்வளவும் ஜூலை 5 உக்குள் நடந்து விட்டது.

பின்னர், காவேரி முதலிய நதியில் வெள்ளம் வரத் தொடங்கியது. தஞ்சாவூர் ஜில்லா விவசாயிகள் கொஞ்சம் காலப் பிற்பாடானாலும் பரவாயில்லை யென்று, குதூகலத்துடன் விதை தெளிப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள். நாற்றங்கால்களைச் செப்பனிட்டு, நெல் விதையும் ஊற வைத்தார்கள். இந்த முக்கியமான சந்தர்ப்பத்தில்

பிரவாகம் வற்றிவிட்டதென்றும் காரணம் சொல்லப்படுகிறது. இது ஒரு காரணம் ஆகுமா! மேற்படி நதிகளில் பிரவாகம் தொடர்ந்து வருகிறதா, இல்லையா என்று பார்த்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் என்ஜினியரிங் இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு வேறு என்ன வேலை! அந்த இரண்டு நாட்களும் அவர்கள் எங்கே போய் என்னத்தைச் செய்து கொண்டிருந்தார்கள்! ரயில் நிறுத்தத் தொண்டில் கலந்து கொள்வதற்காகப் போய் விட்டார்களா!

தேசமெங்கும் உணவுப் பெருக்கப் பிரச்னையில் கவனம் செலுத்திக் கொண்டிருக்கும் சமயத்தில், தமிழ் நாட்டில் பத்து ஜில்லாக்கள் தஞ்சாவூர் ஜில்லா விவசாயத்தையே உணவுக்கு நம்பியிருக்கும் நிலைமையில், இத்தகைய தவறு செய்த என்ஜினியரிங் இலாகா கண்டனத்துக்கு உரியது என்பதில் சந்தேகமில்லை. கஷ்டப்பட்ட விவசாயிகளுக்கு மட்டுமல்லாமல் நாட்டுக்கே அவர்கள் தீங்கு இழைத்திருக்கிறார்கள்.

இனிமேலாவது இத்தகைய தவறுகளைச் செய்யாமலிருப்பார்கள் என்று எதிர்பார்ப்போமாக.

அணையைத் திறந்து தண்ணீர் விடுவதில் ஒரு முக்கியமான விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். முதலிலே விடும்போது போதுமான அளவு நிறையத் திறந்து விட்டு, கடைசிப் பாசன வாய்க்கால்கள் வரையில் போய்த் தண்ணீர் சேரும்படி செய்ய வேண்டும். இவ்விதமின்றி ஆரம்பத்திலேயே கொஞ்சம் கொஞ்சமாகத் திறந்துவிட்டுக் கொண்டிருந்தால், தண்ணீர் பாசன நதிகளிலும் வாய்க்கால்களிலும் முக்கால் அளவு தூரம் போய் நின்று விடுகிறது. பிறகு ஒவ்வொரு தடவையும் இப்படியே ஆகி விடுகிறது. கடைமடை வரையில் தண்ணீர் போய் எட்டுவதில்லை.

கூடாது. இவ்விதம் செய்யப்படுவதாக, ஒவ்வொரு நீர்த் தேக்கப் பாசனப் பிரதேசத்திலும், மேல் கோடியிலுள்ள விவசாயிகள் பிரதி வருஷமும் புகார் செய்கிறார்கள். ஆரம்பத்தில் போதிய அளவு நிறையத் தண்ணீர் விட்டால் பிற்பாடு அளவறிந்து பகுத்து விடலாம்; அவசியமானால் முறைகளை ஏற்படுத்திக் கொள்ளலாம்.

தண்ணீரைச் செலவழிப்பதில் செட்டு வேண்டியதுதான். ஆனால் அசட்டுத்தனமான செட்டு உதவாது. இம்மாதிரி உணவுப் பொருள் பற்றாக்குறை உள்ள காலங்களில் தண்ணீர் விடுவதில் செய்யப்படும் தவறுகள் தேச நலத்துக்கே செய்யப்படும் குற்றமாகும்.

மேட்டூர் — பாபநாசம் அணைக் கட்டுகளிலிருந்து இந்த வருஷத்தில் இனிமேல் ஒழுங்காகத் தண்ணீர் திறந்து விடப்படு மென்றும், விவசாயிகள் புகார் செய்வதற்கே இடம் இராது என்றும் நம்புகிறோம்.

# வள்ளுவர் பரம்பரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மயிலாப்பூரில், கூரை தாழ்ந்த ஓட்டு வீடு ஒன்றில், ஒரு தறிகாரர் கைத்தறியில் துணி நெய்து கொண்டிருந்தார். அவருக்கு அவருடைய குடும்பத்தார் உதவி செய்து கொண்டிருந்தார்கள்.

திடீரென்று வானுலகத் தேவர்களும் பூவுலகத்து முனிவர்களும் அந்த வீட்டைத் தேடி வந்து உள்ளும் புறமும் கூட்டமாக நின்றார்கள். கைத்தறித் தொழிலாளி சற்று வேலையை நிறுத்தி, வந்தவர்களுக்கு மூகமன் கூறி, "எல்லாரும் எங்கே வந்தீர்கள்!" என்று வினவினார்.

வந்தவர்களில் முதன்மையாக இருந்தவர் கூறினார் :—"தில்லையம்பலத்தில் நடராஜப் பெருமான் ஆனந்த நடனம் செய்து கொண்டிருந்தார். நாங்கள் எல்லாரும் பரவசமாகப் பார்த்துக் கொண்டிருந்தோம். திடீரென்று இறைவன் ஒரு காலை மேலே தூக்கிக் காது வரையில் எட்டும்படி நீட்டி ஊர்த்துவ தாண்டவம் ஆடலானார். அதன் காரணம் எங்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. தாண்டவ சாஸ்திரம் எதிலும் இதற்குப் பொருள் கூறப்படவில்லை. ஆட்டம் நின்றதும் நடராஜப் பெருமானையே கேட்டோம். இறைவன் தங்களிடம் வந்து கேட்கும்படி பணித்தார். அவ்விதமே இங்கு வந்தோம். எம்பெருமான் ஊர்த்துவ தாண்டவம் ஆடியதன் இரகசியத்தை எங்களுக்குச் சொல்லி அருள வேண்டும்!" என்றார்.

உடனே, அந்தக் கைத்தறித் தொழிலாளி ஒரு பாடல் மூலமாகத் தமது பதிலைக் கூறினார். அது வருமாறு :—

"பூவில் அயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி அளந்தோனும் தாமிருக்க—நாவில்
இழைநக்கும் இந்த ஏழை அறிவேனோ
குழைநக்கும் பிஞ்சகன் தன் கூத்து!"

இவ்விதம் கூறியவர், தெய்வத் திருக்குறள் இயற்றிய திருவள்ளுவர் பெருமான்தான். அவர் தறியடியில் உட்கார்ந்து நெசவு செய்து கொண்டே, தில்லையில் நடந்த ஆனந்தத் தாண்டவ நிகழ்ச்சியை ஞானக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தார். சிவபெருமானுடைய ஒரு காதின் குழை தரையில் விழுந்ததையும், அதை ஊர்த்துவ தாண்டவம் ஆடும்போது இறைவன் லாகவமாகக் காலினால் எடுத்துத் திருவாயினால் தொட்டுக் காதிலே திரும்ப அணிந்து கொண்டதையும் கவனித்து விட்டார். நேரில் பார்த்துக் கொண்டிருந்த தேவர்கள்—முனிவர்களுக்குத் தெரியாத இரகசியம் திருவள்ளுவருக்குத் தெரிந்து விட்டது.

இது கதையாகவோ, கற்பனையாகவோ இருக்கலாம். இத்தகைய கதையைக் கற்பனை செய்த நம் முன்னோர்களின் மனநிலை எத்தகையது என்பதைக் கவனிக்க வேண்டும். தேவர்களையும் முனிவர்களையும் காட்டிலும் ஒரு கைத்தறித் தொழிலாளி மெய்யறிவில் மேம்பட்டவர் என்பதை அழகாக உணர்த்தினார்கள்.

இதற்கு, தெய்வத் திருக்குறள் மறுக்க முடியாத அத்தாட்சியாக இன்னும் விளங்கி வருகிறது. திருக்குறளைக் காட்டிலும் சிறந்த நூல் உலகில் இல்லையென்று நாம் பெருமிதத்துடன் சொல்லுகிறோம்; உலகத்தாரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

இந்நாளில் தமிழகத்தில் பலர் திருக்குறள் ஏட்டைக் கட்டிக்கொண்டு அழுகிறார்கள்; பள்ளிக்கூடங்களில் கட்டாய பாடமாக்க வேண்டும் என்கிறார்கள்; திருவள்ளுவருக்குப் பலவித விழாக்களும் கொண்டாடுகிறார்கள்.

ஆனால் இவ்வளவெல்லாம் செய்தும், திருவள்ளுவரின் பெருமையோ, திருக்குறளின் கருத்தோ நம்மில் பலருடைய உடம்பில் சிறிதும் ஒட்டவில்லை; அறிவில் அணுவளவும் ஏறவில்லை.

ஏறியிருந்தால், ராஜாஜியின் புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பார்களா!

ஒரு கைத்தறித் தொழிலாளி உலகிலேயே ஒப்பற்ற நூலைச் செய்யும் ஆற்றல் படைத்தவராயிருந்திருக்கிறார். ஆனால் நம் சிறுவர்கள் பாதி நேரம் கைத்தொழில்களில் கவனம் செலுத்துவதினால் அவர்களுக்குக் கல்வியறிவு கிட்டாது என்றும், மூடர்களாகி விடுவார்கள் என்றும் சொல்கிறார்கள்! இவர்கள் படித்த படிப்பெல்லாம் வெறும் ஏட்டுச் சுரக்காய்தான் அல்லவா!

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்"

என்னும் தமிழ் மறை அவர்கள் மூளையிலேயே ஏறவில்லை யென்றுதானே கொள்ள வேண்டும்!

* * *

வள்ளுவர் பரம்பரையில் வந்த கைத்தறித் தொழிலாளர்களின் லட்சக் கணக்கான குடும்பங்கள் இன்னும் நம் தமிழகத்தில் இருக்கின்றன. வாழையடி வாழையாக அந்த அபூர்வமான தொழிலை அவர்கள் பாதுகாத்து வளர்த்து வந்திருக்கிறார்கள். நமது காலத்திலே, — சுதந்திர இந்தியாவிலே,—அவர்களுடைய வாழ்க்கை பெரும் நெருக்கடிக்கு உள்ளாகி யிருக்கிறது. ஆலைத் தொழிலின் போட்டியால் வள்ளுவர் பரம்பரையினர் சொல்ல முடியாத அல்லலுக்கு உள்ளாகி வருகிறார்கள்.

அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்றும், நம் புராதனக் கைத்தறித் தொழிலைப் பாதுகாக்க வேண்டும் என்றும் தற்போது பிரயத்தனம் நடந்து வருவது பற்றி மகிழ்ச்சி அடைகிறோம்.

அழகழகான சித்திர விசித்திர வேலைப்பாடுகள் அமைந்த பலவித ஆடைகளை நெய்யும் ஒரு கைத்தறியாளரின் குடும்பத்தை நம் சித்திரக்காரர் அட்டைப் படத்திலே தீட்டி யிருப்பதை நேயர்கள் பார்த்து மகிழ்வார்கள்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 31

## "வேளை வந்து விட்டது!"

சென்ற அத்தியாயத்தில் கூறிய நிகழ்ச்சிகளோடு இந்தக் கதையை முடித்துவிடக் கூடுமானால் எவ்வளவோ நன்றாயிருக்கும். நேயர்களில் சிலர் ஒருவேளை அவ்விதம் எதிர்பார்க்கவுங்கூடும். ஆனால் அது இயலாத காரியமாயிருக்கிறது. அதே தினத்தில் ஏறக்குறைய அதே நேரத்தில் கடம்பூர் சம்புவரையரின் மாளிகையில் நடந்த பயங்கர நிகழ்ச்சியைப் பற்றி நாம் இனிச் சொல்ல வேண்டியிருக்கிறது.

• • •

நந்தினி அவளுடைய அந்தப்புர அறையில் தனியாக அங்கு மிங்கும் நடந்து கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளத்தில் குடிகொண்டிருந்த பரபரப்பை அவளுடைய முகத் தோற்றம் காட்டியது. அவளுடைய கண்களில் ஓர் அபூர்வமான மின்னொளி சுடர்விட்டுத் தோன்றி மறைந்தது. அந்த அறைக்குள்ளே வருவதற்கு அமைந்திருந்த பல வழிகளையும் அவள் அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த வழிகளில் ஏதாவது காலடிச் சத்தம் கேட்கிறதா என்று அவளுடைய செவிகள் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தன. "வேளை நெருங்கி விட்டது!" என்று அவளுடைய உதடுகள் அடிக்கடி முணுமுணுத்துக் கொண்டிருந்தன. சில சமயம் அவ்விதம் முணுமுணுத்த அவளுடைய உதடுகள் துடித்தன. இன்னும் சில சமயம் அவளுடைய கண்ணிமைகளும் புருவங்களும் துடித்தன. ஒவ்வொரு தடவை அவள் உடம்பு முழுதுமே ஆவேசக்காரனுடைய தேகம் துடிப்பதுபோல் பதறித் துடிதுடித்தது.

நந்தினி படுப்பதற்காக அமைந்திருந்த பஞ்சணை மெத்தை விரித்த கட்டிலில் நாலு பக்கமும் திரைச்சீலைகள் தொங்கின. அவை கட்டிலை அடியோடு மறைத்துக் கொண்டிருந்தன. நந்தினி ஒரு பக்கத்துத் திரைச் சீலையை மெதுவாகத் தூக்கினாள். படுக்கையில் நீளவாட்டில் வைத்திருந்த கொலை வாளைப் பார்த்தாள். கொல்லன் உலைக்களத்தில் ஜொலிக்கும் தீயினாலேயே செய்த வாளைப் போல் அது மின்னிட்டுத் திகழ்ந்தது. அத்தீயினால் மெத்தையும் கட்டிலும் திரைச் சீலைகளும் எரிந்து போகவில்லை என்பது ஆச்சரியத்துக்கு இடமாயிருந்தது. இதை நினைத்துப் பார்த்துத்தான், அது செந்தழலினால் செய்த வாள் அல்ல வென்றும், இரும்பினால் செய்த வாள்தான் என்றும் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது.

நந்தினி அந்த வாளைக் கையில் எடுத்தாள். தூக்கிப் பிடித்தாள். தீபத்தின் ஒளியில் அதை இன்னும் நன்றாக மின்னிடும்படி செய்து பார்த்து உவந்தாள்.

பிறகு, அதைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டாள். கன்னத்தோடு சேர்த்து வைத்துக் கொண்டு முத்தமிட்டாள். அந்த வாளுடன் உரையாடவும் செய்தாள். "தெய்வ வாளே! நீ உன்னுடைய வேலையைச் செய்ய வேண்டிய வேளை நெருங்கி விட்டது! என்னை நீ கைவிட மாட்டாய் அல்லவா? இல்லை, இல்லை! நீ என்னைக் கைவிட மாட்டாய்! என்னுடைய கைகளே தான் என்னைக் கைவிட்டால் விடும்!" என்று கூறினாள்.

பிறகு, தன் கரங்களைப் பார்த்து, "கரங்களே! நீங்கள் உறுதியாக இருப்பீர்களா? சிச்சி! இப்போதே இப்படி நடுங்குகிறீர்களே? சமயம் வரும்போது என்ன செய்வீர்கள்? ஆம், ஆம்! உங்களை நம்புவதில் பயனில்லை. வேறு இரண்டு கரங்களைத்தான் இன்றைக்கு நான் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்!" என்றாள்.

திடீரென்று நந்தினியின் உடம்பு முழுதும் ஒருதடவை சிலிர்த்தது. வெறிக் கனல் பாய்ந்த கண்களினால் மேல் நோக்காகப் பார்த்தாள். "ஆகா! நீ வந்து விட்டாயா? வா! வா! சரியான சமயத்திலேதான் வந்தாய்! என் அன்பே! என் அரசே! வா! வீர பாண்டியன் தலையே! ஏன் கூரை ஓரத்திலேயே இருக்கிறாய்? இறங்கி வா! இங்கே யாரும் இல்லை! உன் அடியாளைத் தவிர வேறு யாரும் இல்லை! ஏன் இப்படி விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்! 'இந்த கண்டத்துக்குத் தப்பி உயிர் பிழைத்தால் உன்னைப் பாண்டிய சிங்காதனத்தில் ஏற்றி வைப்பேன்!' என்று சொன்னாயே! அதை நான் மறக்கவில்லை. உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியையும் மறக்கவில்லை. அதை நிறைவேற்றும் வேளை நெருங்கிவிட்டது. அதற்காக நான் எத்தனை காலம் பொறுமையாகக் காத்திருந்தேன்? என்னென்ன வேஷங்கள் போட்டேன்?— எல்லாம் நீ பார்த்துக் கொண்டுதானிருந்தாய்! இப்போதும் பார்த்துக் கொண்டிரு! கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிரு. நீதான் கண் கொட்டுவதே இடையாதே! நானும் கண்ணை மூடித் தூங்க முடியாமல் செய்து வருகிறாய்! இன்று இரவு உனக்குப் பழிவாங்கி விட்டேனானால், அப்புறமாவது என்னை விட்டுப் போவாய் அல்லவா? அப்புறமாவது என்னைத் தூங்க விடுவாய் அல்லவா?...மாட்டாயா? பாண்டிய சிங்காதனத்தில் நான் ஏறி அமர்வதைப் பார்த்த பிறகுதான் போவாயா? என்னுடைய வாக்குறுதியை நான் நிறைவேற்றினால், உன்னுடைய வாக்குறுதியை நீ நிறைவேற்றுவதாகச் சொல்கிறாயா?... இல்லை, இல்லை! எனக்குச் சிங்காதனமும் வேண்டாம், மணி மகுடமும் வேண்டாம். உன் மகன் என்று யாரோ ஒரு சிறுவனைக் கொண்டு வந்தார்கள். அவனைச் சிங்காதனத்தில் ஏற்றி மணி மகுடமும் சூட்டியாயிற்று. உனக்குப் பழிக்குப் பழி வாங்கி விட்டேனானால், அதைக்கொண்டு நீ திருப்தி அடைவாய்! பின்னராவது, என்னை விட்டுச் செல்வாய்! போரில் இறந்தவர்கள் எல்லாரும் எந்த வீர சொர்க்கத்துக்குப் போகிறார்களோ, அந்த வீர சொர்க்கத்துக்கு நீயும் போவாய்! அங்கே என்னைப் போல் எத்தனையோ பெண்கள் இருப்பார்கள்! அவர்களில் ஒருத்தியை...... என்ன? மாட்டேன் என்கிறாயா? கடவுளே! நானும் உன்னோடு வரவேண்டும் என்கிறாயா?......சரி, சரி! அதைப் பற்றிப் பிறகு பேசிக் கொள்வோம்! என் அன்பே! யாரோ வருகிறார்கள் போலிருக்கிறது. நீ மறைந்து விடு!...... நானும் இந்தப் பழி வாங்கும் வாளை மறைத்து வைக்கிறேன்......"

அச்சமயம் வாசற்படிக்கு அருகில் உண்மையாகவே காலடிச் சத்தம் கேட்டது. நந்தினி வாளைக் கட்டிலில் வைத்துக் கொண்டிருக்கும் போதே மணிமேகலை உள்ளே வந்தாள்.

சற்று முன் வெறி பிடித்துப் புலம்பிய நந்தினி ஒரு கண நேரத்தில் முற்றும் மாறுதல் அடைந்தவளாய், "நீதானா, மணிமேகலை? வா! வா!" என்றாள். அவள் குரலில் அமைதி நிலவியது.

"அக்கா! இது என்ன? எப்போதும் வாளும் கையுமாகவே இருக்கிறீர்களே?" என்றாள் மணிமேகலை.

"பின், என்ன செய்வது? ஆண் பிள்ளைகள் இவ்வளவு தூர்த்தர்களாயிருந்தால், நாம் வாளைத் துணைகொள்ள வேண்டியதுதானே?"

"தேவி! நான் ஒருத்தி துணை இருக்கிறேனே? என்னிடம் தங்களுக்கு நம்பிக்கை இல்லையா?"

"உன்னிடம் நம்பிக்கை இல்லாமலா என்னுடைய அந்தரங்கத்தை யெல்லாம்

உன்னிடம் சொன்னேன், மணிமேகலை! இந்த உலகிலேயே நான் நம்பிக்கை வைத்திருப்பவள் நீ ஒருத்திதான். ஆனாலும், உன் கூடப் பிறந்த சகோதரனுக்கு எதிராக உன்னால் ஒன்றும் செய்ய முடியாதல்லவா?''

''அக்கா! எனக்குக் கூடப் பிறந்த சகோதரன் இல்லை என்று முடிவு செய்து கொண்டு விட்டேன்......''

''ஏன் இவ்விதம் சொல்கிறாய்? எப்படியும் அவன் உன் சகோதரன்......''

''சகோதரனாவது? சகோதரியாவது? அந்த உறவெல்லாம் வெறும் பிரமை என்று தெரிந்து கொண்டேன். கந்தமாறன் என்னுடைய விருப்பத்துக்கு எதிராக,—தன்னுடைய சௌகரியத்துக்காக,—என்னை வற்புறுத்திக் கட்டிக் கொடுக்கப் பார்க்கிறான்! உண்மையான சகோதர பாசம் இருந்தால், இப்படிச் செய்வானா?......''

''தங்காய்! உன்னுடைய நன்மைக்காகவே அவன் உன்னை இளவரசருக்கு மணம் செய்து கொடுக்க விரும்பலாம் அல்லவா?''

''ஆமாம்; என்னுடைய நன்மை தீமையை இவன் கண்டுவிட்டானாக்கும்! உண்மையில், என்னுடைய நன்மையை அவன் கருதவேயில்லை, அக்கா!''

''ஈழம் முதல் வட பெண்ணை வரையில் பரந்த சோழ ராஜ்யத்தின் சிங்காதனத்தில் நீ பட்ட மகிஷியாக வீற்றிருக்க வேண்டும் என்று உன் தமையன் விரும்புவது உன்னுடைய நன்மைக்கு அல்லவா?''

''இல்லவே இல்லை! நான் தஞ்சாவூர் ராணியானால், இவன் முதன் மந்திரியாகலாம் அல்லது பெரிய பழுவேட்டரையரைப் போல் தனாதிகாரியாகலாம் என்ற ஆசைதான் காரணம்! அக்கா! அக்கா...!'' என்று மணிமேகலை மேலே சொல்லத் தயங்கினாள்.

''சொல், மணிமேகலை! உன் மனதில் உள்ளது எதுவானாலும் தாராளமாய்ச் சொல்லலாம். என்னிடம் உனக்குள்ள அன்பைக் குறித்து நீ சொன்னதெல்லாம் உண்மைதானே!''

''அக்கா! அதைப் பற்றிச் சந்தேகிக்க வேண்டாம். இந்த உலகத்திலேயே நான் அன்பு வைத்திருப்பது இரண்டு பேரிடந்தான். ஒருவர் தாங்கள்......''

''இன்னொருவர் யார்?''

''உங்கள் மனதுக்கு அது தெரியும்' என்னை ஏன் கேட்கிறீர்கள்......?''

''தங்காய்! உனக்கு அது சந்தோஷமாயிருக்கும் என்று நினைத்தேன். கதைகளும் காவியங்களும் நீ கேட்டதில்லையா? ஒரு பெண்ணின் உள்ளத்தில் காதல் உதயமானால் அதைப்பற்றி அவள் யாரிடமாவது பேச விரும்புவது இயல்பு அல்லவா? அந்தரங்கத் தோழி என்பது பின் எதற்காக......?''

''அது உண்மைதான், அக்கா! என் அந்தரங்கத்தையும் தங்களிடம் தெரியப்படுத்தி யிருக்கிறேன். ஆனால் இப்போது நான் தங்களிடம் அவசரமாக வந்தது வேறு ஒரு செய்தி சொல்வதற்காக. மிக்க கவலை தரும் செய்தி, அக்கா!''

நந்தினி திடுக்கிட்டு, ''என்ன? என்ன?'' என்று கேட்டாள். எத்தனையோ காலமாகத் திட்டமிட்டுக்கொண்டிருந்து இன்று நிறைவேற்றலாம் என்று எண்ணியிருந்த காரியத்துக்கு ஏதாவது தடங்கல் ஏற்படுமோ என்ற பீதி அவள் மனத்தில் குடி கொண்டது. அதன் அறிகுறி அவள் முகத்திலும் தோன்றியது.

''அக்கா! தனாதிகாரி பழுவேட்டரையர் இன்னும் தஞ்சாவூருக்குப் போய்ச் சேரவில்லையாம். வழியில்......''

''வழியில் என்ன நேர்ந்தது? ஒருவேளை மனத்தை மாற்றிக்கொண்டு திரும்பி விட்டாரா?'' என்று நந்தினி கேட்ட கேள்வியில் பீதி குறைந்திருக்கவில்லை.

''அப்படி அவர் திரும்பி யிருந்தால் நன்றாயிருக்கும், அக்கா! அன்றைக்கு நாம் ஏரித் தீவில் இருந்தபோது புயல் அடித்ததல்லவா? அந்தப் புயல் கொள்ளிடத்திலும் அப்பாலும் ரொம்பக் கடுமையாக அடித்ததாம். பழுவேட்டரையர் கொள்ளிடத்தில் படகில் சென்ற போது புயல் பலமாக இருந்ததாம்......''

''அப்புறம்?'' என்று நந்தினி பரபரப்புடனே தான் கேட்டாள். ஆயினும் கவலைத் தொனி சிறிது குறைந்திருந்தது.

''அக்கரை சேரும் சமயத்தில் படகு கவிழ்ந்து விட்டதாம்!''

''ஐயோ!''

''தப்பிக் கரை ஏறியவர்கள் கொள்ளிடக் கரையில் எங்கும் தேடிப் பார்த்தார்கள். தங்கள் கணவர் மட்டும் அகப்படவில்லை!'' என்றாள் மணிமேகலை.

இந்தச் செய்தியைக் கேட்டதும் நந்தினி விம்மி அழுவாள் என்று மணி

மேகலை எதிர்பார்த்து, அவளுக்கு ஆறுதல் சொல்லத் தயாராயிருந்தாள். ஆனால் நந்தினியோ அப்படியொன்றும் செய்ய வில்லை. சிறிதும் பட படப்புக் காட்டாமல், அவநம்பிக்கை தொனித்த குரலில், "இந்தச் செய்தி உனக்கு எப்படித் தெரிந்தது?" என்றாள்.

"பழுவேட்டரையரோடு போன ஆட்களில் ஒருவன் திரும்பி வந்திருக்கிறான். அவன் என் தமையனிடம் சொல்லிக் கொண்டிருந்தான். நானே என் காதினால் கேட்டேன், அக்கா! தங்களிடம் இந்தச் செய்தியை எப்படித் தெரிவிப்பது என்று என் தமையன் தயங்கி, இளவரசரிடம் யோசனை கேட்டுக் கொண்டிருந்தான். நான் எப்படியாவது தங்களிடம் சொல்லி விடுவது என்று ஓடிவந்தேன்..."

இவ்விதம் கூறிய மணிமேகலை துயரம் தாங்காமல் விம்மத் தொடங்கினாள்.

நந்தினி அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு, "என் கண்ணே! என்னிடம் நீ எவ்வளவு அன்பு வைத்திருக்கிறாய் என்று தெரிந்து கொண்டேன். ஆனால், நீ வருத்தப்பட வேண்டாம்!" என்றாள்.

மணிமேகலை சிறிது வியப்புடனேயே நந்தினியை நிமிர்ந்து பார்த்தாள். 'இவளுடைய நெஞ்சு எவ்வளவு கல் நெஞ்சு?' என்று அவள் மனத்தில்தோன்றிய எண்ணத்தை நந்தினி தெரிந்து கொண்டாள்.

"தங்காய்! துக்கச் செய்தியைக் கூறி எனக்கு ஆறுதல் சொல்லுவதற்காக நீ ஓடி வந்தாய். ஆனால் உனக்கு நான் தேறுதல் கூறவேண்டி யிருக்கிறது. நீ வருத்தப்பட வேண்டாம். என் கணவருடைய உயிருக்கு ஆபத்து ஒன்றும் வரவில்லை என்பது நிச்சயம். அப்படி ஏதாவது நேர்ந்திருந்தால் என் நெஞ்சே எனக்கு உணர்த்தியிருக்கும். அதனாலேதான் நான் கவலைப்படவில்லை. ஆனால் நீ கேள்விப்பட்டதை இன்னும் விவரமாய்ச் சொல்! என் மனத்தில் வேறொரு சந்தேகம் உதித்திருக்கிறது ......"

"என்ன சந்தேகம், அக்கா!"

"உன் தமையனும் அந்தப் பல்லவ பார்த்திபேந்திரனும் சேர்ந்து என் கணவருக்கு ஏதேனும் கெடுதல் செய்யத் திட்டமிட் டிருக்கிறார்களோ என்று எண்ணுகிறேன். அதற்கு, முன் ஜாக்கிரதையாக இம்மாதிரி ஒரு செய்தியை அவர்களே தயாரித்திருக்கலாமல்லவா?"

"எனக்கு விளங்க வில்லை, அக்கா! அவர்கள் ஏன் பழுவேட்டரையருக்குத் தீங்கு செய்ய வேண்டும்?"

"நீ பச்சைக் குழந்தையாகவே இருக்கிறாய், மணிமேகலை! உன் தமையனும் பார்த்திபேந்திரனும் என் மீது துர் எண்ணம் கொண்டிருக்கிறார்கள் என்று நான் சொல்ல வில்லையா? அதற்காகத்தான் இந்த வாளை எப்போதும் அருகிலேயே வைத்துக் கொண்டிருக்கிறேன் என்றும் சொல்லவில்லையா?......"

"சொன்னீர்கள்! அதனால் கந்தமாறனை இனிமேல் என் தமையன் என்று சொல்ல வேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டேன். அந்தப் பாதகனை என் உடன் பிறந்தவனாக நான் இனிக் கருத மாட்டேன். இருந்தாலும்,...... அவர்கள் பழுவேட்டரையருக்கு ஏன் தீங்கு செய்ய வேண்டும்?"

"தங்காய்! இது கூடவா நீ தெரிந்து கொள்ள முடியவில்லை? கிழவரைக் கலியாணம் செய்து கொண்டு தவிக்கும் நான், அவர் போய் விட்டால் மனதிற்குள் சந்தோஷப்படுவேன், பிறகு அவர்களுடைய துர் நோக்கத்துக்கும் இணங்குவேன் என்றுதான். உன் தமையன் இப்படிப்பட்டவன் என்று தெரிந்திருந்தால் அவனை என் வீட்டில் வைத்திருந்து சகோதரனைப் போல் கருதிப் பணிவிடை செய்திருக்க மாட்டேன். யமலோகத்தின் வாசல் வரை சென்றவனைக் காப்பாற்றி யிருக்க மாட்டேன்......"

"அக்கா! இனி நான் தங்களை விட்டு ஒரு கணமும் பிரிய மாட்டேன். அந்த இருவரில் ஒருவர் இங்கு வந்தால், என்னுடைய கையாலேயே அவர்களைக் கொன்று விடுவேன்!"

"மணிமேகலை! அந்தக் கவலை உனக்கு வேண்டாம். என்னை நானே காப்பாற்றிக் கொள்வேன். கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் என் அருகில் நெருங்கினால், என்றும் மறக்காதபடி அவர்களுக்குப் புத்தி கற்பித்து அனுப்புவேன். அவர்களிடம் எனக்குச் சிறிதும் பயமில்லை. முரட்டு இளவரசரைப் பற்றி மட்டுந்தான் கொஞ்சம் பயம் இருந்தது. நல்லவேளையாக அந்த அபாயத்தினின்று என்னை நீயே காப்பாற்றி விட்டாய்!"

"நான் தங்களைக் காப்பாற்றினேனா? அது எப்படி?"

"இளவரசரின் உள்ளத்தை நீ கவர்ந்து விட்டாய் என்பதை அறியவில்லையா,

னுடைய நிலைமையையும் உன் அன்புக்குரியவனுடைய நிலைமையையும் உணரவில்லை. என்னைப்பற்றி நீ கவலைப்படுகிறாய்; என் கணவரைப் பற்றிக் கவலைப்படுகிறாய். எங்களைப் பற்றி உண்மையில் கவலைப்பட வேண்டியதேயில்லை. என் கணவர் எப்பேர்ப்பட்டவர் என்பது உனக்குத் தெரியும். அவர் வாயசைத்தால் இந்த நாடே அசையும். சுந்தர சோழ சக்கரவர்த்தி அவர் இட்ட கோட்டைத் தாண்ட மாட்டார். என் கணவர் வார்த்தைக்கு மாறாக முதன் மந்திரி வார்த்தையையும் கேட்க மாட்டார். அவருடைய சொந்தப் பெண்டு பிள்ளைகளின் பேச்சுக்கும் செவி கொடுக்க மாட்டார். பழுவேட்டரையரை வயதான கிழவர் என்று உன் தமையனைப் போன்ற மூடர்கள் எண்ணிப் பரிகாசமும் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர் ஒரு மூச்சு விட்டால், உன் தமையனையும் பார்த்திபேந்திரனையும் போன்ற நூறு வாலிபர்கள் மல்லாந்து விழுவார்கள். ஆகையால் பழுவேட்டரையருக்கு யாரும் தீங்கு செய்துவிட முடியாது. என் கண்ணே! என்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் எனக்குத் தெரியும். இதைக் காட்டிலும் எத்தனையோ இக்கட்டான நிலைமைகளில் என்னை நான் காப்பாற்றிக் கொண்டிருக்கிறேன். உண்மையாகவே இப்போது நான் கவலைப்படுவதெல்லாம்



உன்னைப் பற்றித்தான். 'இந்தப் பெண் நம்மிடம் இவ்வளவு அன்பு வைத்திருக்கிறளே? இவளுக்கு ஒன்றும் நேராமலிருக்க வேண்டுமே?' என்று கவலைப்படுகிறேன். நீ இந்த அறைக்குள் சற்று முன் வந்தபோது கூட உன்னைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன்..."

"தாங்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லை, அக்கா! எனக்கு அப்படி என்ன அபாயம் வந்து விடும்?"

"பேதைப் பெண்ணே! வேண்டாத புருஷனுக்கு வாழ்க்கைப் படுவதைக் காட்டிலும் பெண்களுக்கு நேரக் கூடிய அபாயம் வேறு என்ன இருக்க முடியும்?"

"அது ஒரு நாளும் நடவாத காரியம்."

"உன் தமையன் உன்னை இளவரசருக்கு மணம் செய்விப்பது என்று தீர்மானம் செய்து விட்டான்; உன் தந்தையும் சம்மதித்து விட்டார்."

"அவர்களுடைய தீர்மானமும் சம்மதமும் என்னை என்ன செய்யும்? நான் சம்மதித்தால்தானே?"

"இப்படிக் குழந்தைபோல் பேசுகிறயே? சிற்றரசர் குலத்துப் பெண்களைக் கலியாணம் செய்து கொடுப்பது, அந்தப் பெண்களின் சம்மதத்தைக் கேட்டுக் கொண்டுதான் உலகத்தில் நடைபெறுகிறதா? அதிலும், மூவுலகையும் ஆளும் சக்கரவர்த்தியின் மூத்த குமாரர், — பட்டத்து இளவரசர், — உன்னை மணந்து கொள்ள விரும்பினுல், அதற்கு யார் தடை சொல்ல முடியும்?"

"ஏன்? என்னுல் முடியும். இளவரசரிடம் நேரே சொல்லி விடுவேன்."

"என்ன சொல்லுவாய்?"

"அவரை மணந்து கொள்ள எனக்கு இஷ்டம் இல்லை என்று சொல்வேன்..."

"காரணம் கேட்டால்?"

"உண்மையான காரணத்தைத்தான் சொல்வேன். என மனம் அவருடைய சிநேகிதர் வல்லவரையரிடம் ஈடுபட்டு விட்டது என்று சொல்வேன்..."

"பேதைப் பெண்ணே! இதை நீ சொல்லவே வேண்டாம். அவர்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கிறது."

"தெரிந்திருந்தால் என்னை ஏன் வற்புறுத்துகிறர்கள்? அப்படி அதிகமாக வற்புறுத்தினுல், இதோ நானும் ஒரு கத்தி வைத்திருக்கிறேன், அக்கா!"

என்று சொல்லி மணிமேகலை தன் இடுப்பில் செருகியிருந்த சிறிய கத்தி ஒன்றை எடுத்துக் காட்டினுள்.

"என் அருமைத் தங்கையே! உன் அறியாமையைக் கண்டு ஒரு பக்கம் எனக்கு அழுகை வருகிறது; இன்னெரு பக்கம் சிரிப்பும் வருகிறது."

"அப்படி என்ன நான் உளறி விட்டேன், அக்கா!"

"உன்னை யாரோ வற்புறுத்தப் போவதாக எண்ணியிருக்கிறுய். உன்னுடைய சம்மதத்தைக் கேட்பார்கள் என்றும் நினைத்திருக்கிறுய். அவ்விதம் ஒன்றும் அவர்கள் செய்யப் போவதில்லை. நீ இளவரசரை மணந்து கொள்ளத் தடையாயிருக்கும் காரணத்தை நீக்கி விடப் போகிறுர்கள்!"

"என்ன சொல்லுகிறீர்கள், அக்கா!"

"நீ யாரிடம் உன் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறுயோ, அவருடைய உயிருக்கு அபாயம் நெருங்கியிருக்கிறது என்று சொல்லுகிறேன்..."

"ஐயையோ!"

"உன் தமையன் ஏற்கெனவே அவனுடைய பழைய சிநேகிதன் மீது துவேஷம் கொண்டிருக்கிறுன். இந்த அரண்மனையில் சில மாதங்களுக்கு முன்னுல் சிற்றரசர்கள் கூடிச் செய்த சதியாலோசனையைப் பற்றி இளவரசனிடம் சொல்லிக் கொடுத்து விட்டான் என்று அவனுக்குக் கோபம். தன் முதுகிலே குத்திக் கொல்ல முயற்சித்ததாக வேறு குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறுன். வேறொரு காரணத்தினுல் பார்த்திபேந்திரனுக்கும் உன் காதலன் பேரில் அளவில்லாத கோபம்......"

"இவர்களுடைய கோபம் அவரை என்ன செய்து விடும், அக்கா! அவர் சுத்த வீரர் அல்லவா!"

"சுத்த வீரராயிருந்தால் என்ன? திடீரென்று சூழ்ந்து கொள்ளும் பல கொலைகாரர்களுக்கு மத்தியில் கையில் ஆயுதம் ஒன்றும் இல்லாத ஒரு சுத்த வீரன் என்ன செய்ய முடியும்?......"

"ஐயோ! அவரைக் கொன்று விடுவார்கள் என்று சொல்லுகிறீர்கள்?"

"கொல்லமாட்டார்கள்; கண்டதுண்டமாக வெட்டி நரிகளுக்கும் நாய்களுக்கும் போட்டு விடுவார்கள்......"

"ஐயோ! என்ன கர்ண கடூரம்?"

"கேட்பதற்கே உனக்குக் கர்ண கடூரமாயிருக்கிறதே? உண்மையில் நடந்து விட்டால், என்ன பாடு படுவாய்?"

"அக்கா! இப்போதே என் உயிரும் உள்ளமும் துடிக்கின்றன. நிஜமாக, அப்படியும் செய்து விடுவார்களா? அவர் இளவரசருடைய அத்தியந்த சிநேகிதர் ஆயிற்றே?"

"அத்தியந்த சிநேகிதர்கள் கொடிய பகைவர்களாக மாறுவதைப் பற்றி நீ கேட்டதில்லையா, தங்காய்! உன் தமையனும் பார்த்திபேந்திரனும் அப்படியெல்லாம் இளவரசரிடம் தூபம் போட்டு விட்டிருக்கிறார்கள்......"

"சண்டாளர்கள்! இதெல்லாம் தங்களுக்கு......"

"எனக்கு எப்படித் தெரிந்தது என்று தானே கேட்கிறாய்? இன்று பகலில் பார்த்திபேந்திரன் என்னிடம் விடை பெற்றுச் செல்லும் வியாஜத்தை வைத்துக் கொண்டு வந்திருந்தான்......"

"அந்தப் பாதகன் எங்கேபோகிறான்?"

"அதிக தூரம் போகவில்லை. திருக்கோவலூர்க் கிழவன் மலையமான் ஒரு பெரிய சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு இந்த ஊரை நோக்கி வந்து கொண்டிருக்கிறான் என்று நீ கேள்விப் பட்டாய் அல்லவா?"

"கேள்விப்பட்டேன். அது என்னத்திற்காக என்று ஆச்சரியப்பட்டேன்."

"அதுவும் உன் நிமித்தமாகத்தானாம்! இன்று மத்தியானம் இளவரசர் அதைப் பற்றிப் பிரஸ்தாபித்தாராம். 'மணிமேகலையை எனக்கு மணம் செய்து கொடுக்காவிட்டால், மலையமான் சைன்யம் வந்தவுடன் இந்தக் கோட்டை—அரண்மனை எல்லாவற்றையும் தகர்த்துத் தரைமட்டமாக்கிவிட்டப் போகிறேன்!' என்றாராம். அப்போதுதான் உன் தமையன் 'அதற்குத் தடையாயிருப்பது நாங்கள் அல்ல; உங்கள் சிநேகிதன் வந்தியத்தேவன்தான்' என்றானாம். 'அந்தத் தடையை நீக்க உங்களால் முடியாதா?' என்று இளவரசர் கேட்டாராம். 'கட்டளை அளித்தால் முடியும்' என்றானாம் உன் அண்ணன். என் அருமைச் சகோதரி! பார்த்திபேந்திரனிடம் மேலும் பேச்சுக் கொடுத்துச் சில விவரங்களை அறிந்தேன். உன் ஆருயிர்க் காதலனுடைய உயிருக்கு ஆபத்து நெருங்கி யிருப்பது நிச்சயம். நீ உடனே முயற்சி எடுக்கா விட்டால், கலியாணம் ஆவதற்கு முன்பே கணவனை இழந்து விடுவாய்!" என்றாள் நந்தினி.

இதைக் கேட்ட மணிமேகலையின் உடலும் உள்ளமும் துடிதுடித்ததில் வியப்பு ஒன்றும் இல்லை அல்லவா?

"ஐயோ! அவருக்கு எப்படியாவது உடனே எச்சரிக்கை செய்ய வேண்டுமே!" என்று தட்டுத் தடுமாறிக் கொண்டே கூறினாள்.

"எச்சரிக்கை செய்யலாம். ஆனால், உன் காதலன் சுத்தவீரன் என்று நீ தானே சற்று முன் கூறினாய்? அவனுடைய உயிருக்கு அபாயம் என்று கேட்டுப் பயந்து ஓடி விடுவானா? மாட்டான்! இன்னும் அவனுடைய பிடிவாதம் அதிகமாகும்" என்றாள் நந்தினி.

"தாங்கள்தான் யோசனை சொல்ல வேண்டும். என் தலை சுற்றுகிறது. என்ன செய்கிறது என்று தெரியவில்லை" என்றாள் மணிமேகலை.

"நீ இங்கே வரும்போது அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். எனக்கும் ஒன்றும் புரியவில்லை. நல்ல வேளையாக நீ ஒரு செய்தி கொண்டு வந்தாய். அதிலிருந்து, வல்லவரையரைக் காப்பாற்ற ஒரு யோசனை தோன்றியது."

"நான் கொண்டு வந்த செய்தியிலிருந்தா? அது என்ன செய்தி?"

"பழுவேட்டரையருடைய படகு கவிழ்ந்ததென்றும் பிறகு அவரைப் பற்றித் தகவல் தெரியவில்லை என்றும் சொன்னாய் அல்லவா?"

"ஆமாம்!"

"வந்தியத்தேவரிடம் நான் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். எனக்காக அவர் போய் என் கணவரைப் பற்றிய உண்மை தெரிந்து வரவேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன். நீயும் எனக்காகப் பரிந்து பேசு. இரண்டு பேதைப் பெண்களின் வேண்டுகோளை அந்த வீரர் புறக்கணிக்க மாட்டார். அவரை உடனே இந்த இடத்திலிருந்து வெளியே அனுப்புவதுதான் அவர் உயிரைக் காப்பாற்றும் வழி. வேறு உபாயம் ஒன்றுமில்லை. அவர் போன பிறகு நீ உன் தமையனிடமும் தந்தையிடமும் இளவரசரிடமும் தைரியமாக உன் மனத்தை

## காமதேனுவின் மேல் கல்லெறி !




வெளியிட்டுப் பேசலாம். நானும் உனக்காகப் பேசுகிறேன். 'இஷ்டமில்லாத பெண்ணை வற்புறுத்துவது சோழ குலத்தில் பிறந்தவர்களுக்கு அழகு அல்ல' என்று சொல்லுகிறேன்."

"தங்கள் பேச்சையும் அவர்கள் கேட்காவிட்டால், என் கையில் கத்தி இருக்கிறது!"

"சரி, சரி! இப்போது முதலில் உன் காதலரை வெளியேற்றிக் காப்பாற்ற முயல்வோம். அவர் இருக்குமிடம் உனக்குத் தெரியும் அல்லவா? நீ நேரில் அவரைப் பார்க்க முடியாவிட்டால், உன் தோழி சந்திரமதியை அனுப்பு. இல்லாவிடில், இடும்பன் காரியை அனுப்பு. எப்படியாவது அவரை இங்கே அழைத்துக் கொண்டு வா!"

"அவர் போகச் சம்மதித்தாலும் இங்கேயிருந்து எப்படி வெளியில் போவார், அக்கா! என் அண்ணன் தடுத்து நிறுத்தி விட்டால்......?"

"உன் அண்ணனுக்கு ஏன் தெரிய வேண்டும், மணிமேகலை! முதன் முதலில் அவர் இந்த அறைக்குள் வந்து உன்னைத் திடுக்கிடச் செய்தாரே? அந்தச் சுரங்க வழியிலேயே அனுப்பி விட்டால் போகிறது! சீக்கிரம் போ, தங்காய்! வந்தியத்தேவர் இனி இந்தக் கோட்டையில் இருக்கும் ஒவ்வொரு நிமிடமும் அவருடைய உயிருக்கு அபாயம் அதிகமாகும். உன் தமையன் ஏவும் கொலைகாரர்கள் எப்போது அவரைத் தாக்குவார்கள் என்று நமக்கு என்ன தெரியும்?"

"இதோ போகிறேன், அக்கா! எப்படியாவது அவரை அழைத்துக்கொண்டுதான் திரும்பி வருவேன்" என்று சொல்லி விட்டு மணிமேகலை சென்றாள்.

அவளுடைய காலடிச் சத்தம் மறைந்ததும், பக்கத்திலிருந்த வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவை யாரோ தட்டுவது போன்ற சத்தம் கேட்டது.

நந்தினி இரகசியக் கதவின் அருகில் சென்று, அதன் உட்கதவைத் திறந்தாள். இருட்டில் ஒரு கோரமான முகம் இலேசாகத் தெரிந்தது.

"மந்திரவாதி! வந்து விட்டாயா?" என்றாள் நந்தினி.

"வந்து விட்டேன், ராணி! வேளையும் வந்து விட்டது!" என்றான் ரவிதாஸன்.

# KEEPS PERFECT TIME

-however violently used!

## West End ALL-PROOF "SOWAR PRIMA"



The West End
ALL-PROOF "SOWAR-PRIMA"
10½" Medium Size
W. E. Patent Everbright Steel ... Rs. 162

*Stain Proof, Water-Proof and Shock-Protected*

# WEST END WATCH Co.

BOMBAY CALCUTTA

# கதிர்காமத்தில் கண்கொள்ளாக் காட்சி!

சோம. லெ.

"உள்ளே இன்னது இருக்கிறது என்பது யாருக்கும் தெரியாது. உள்ளே யிருந்து ஒரு தட்டு வரும். அதில் தேங்காய் பழம் வைத்தால் மறுபடி உள்ளே போகும். சிறிது நேரம் கழித்து உடைத்த தேங்காய் மூடிகளும் பழங்களும் வரும். அவை அப்படி வருவதற்குக் காரணம் யாருக்கும் தெரியாது" என்று கதிர்காமத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்கள். ஆம், கதிர்காமத்தின் இரகசியத்தை அறிய வேண்டு மென்ற ஆர்வந்தான் எல்லோரையும் அங்கே இழுத்துச் செல்லுகிறது. தமிழ்நாட்டுப் பெரிய கோவில்களைப் போல இராஜ கோபுரங்கள், ஆயிரக்கால் மண்டபங்கள், வேறுபட்ட ஓசைகளைத் தரும் கற்கள், சிறந்த சிற்பங்கள், கலை அழகு நிறைந்த விக்கிரகங்கள் ஆகியவை கதிர்காமத்தில் இல்லை. அங்கு கொடுக்கப்படும் விபூதி கூட வெண்மையாக இல்லை. அது மலையிலிருந்து எடுக்கப்படுகிறது. கோவிலும் பெரிதாக இல்லை. "மூர்த்தி சிறிதானாலும், கீர்த்தி பெரிது" என்ற வாக்கு கதிர்காமத்திற்குப் பொருந்தும்.

கதிர்காமத்திற்குப் போவதும் எளிதன்று. சில ஆண்டுகளுக்கு முன் வரையில், நல்ல சாலைகள் இல்லை. இப்போதும், திருவிழாக் காலத்தில் மோட்டார்கார்களை 12 மைலுக்கு அப்பாலேயே நிறுத்திவிட வேண்டும். வழியில் அடர்ந்த காடுகள் உள்ளன. அவற்றில் யானை, புலி முதலியன வாழ்ந்தாலும் அவை பக்தர்களைத் துன்புறுத்துவதில்லை. கல்லும் முள்ளும் இடையூறாக இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல், லட்சக்கணக்கான மக்கள் ஆண்டுதோறும் கதிர்காமத்திற்கு வந்து வழிபடுகிறார்கள். இந்தியாவிலிருந்து ஏராளமான பொது மக்கள் வருகிறார்கள். சென்ற ஆண்டில் இவ்வாறு கதிர்காமத்திற்கு வந்தவர்களுள் குன்றக்குடி அடிகளார், சட்டசபைத் தலைவர் சிவசண்முகம் பிள்ளை குறிப்பிடத்தக்கவர்கள். "கதிர்காம நேர்த்திக் கடன்" என்று சொன்னதும், "இமிகிரேசன்" என்னும் கத்தியும் விலகி "விசா" கொடுத்து விடுகிறது.

இவ்வளவு கஷ்டங்களுக்குப் பிறகு கதிர்காமத்துக்கு வருபவர்கள் அங்கு தங்குவதற்கு வசதியான விடுதி இல்லையே என்ற குறை நெடுநாட்களாக இருந்தது. அதை நிறைவாக்கிய பெருமை இராமகிருஷ்ண சங்கத்துக்கு உண்டு.

அன்பு—அடக்கம்—பணிவு என்ற போர்க் கருவிகளால் இராமகிருஷ்ணரின் சீடர்கள் அருள் ஒளி பரப்பி வருகின்றனர். அவர்களுள் தலை சிறந்தவரான விவேகானந்தர், "ஆண்டவனைத் தேடி எங்கே போகின்றீர்கள்! துன்பப்பட்டவர்கள், ஏழைகள் இவர்கள் யாவரும் கடவுளின் வடிவங்கள் அல்லவா! இந்த ஏழைகளையே உங்கள் கடவுளாகக் கொள்ளுங்கள்" என்று கூறியுள்ளார். அந்த வாக்குப்படி, இலங்கை இராமகிருஷ்ண சங்கம் பல தொண்டுகளைச் செய்து வந்திருக்கிறது. இச் சங்கத்தாரின் முயற்சி இல்லையானால், இலங்கை வாழ் இந்துக்களில் பெரும் பகுதியினர் பிற சமயத்தவராகி யிருப்பார்கள். வெள்ளப் பெருக்கு ஏற்பட்ட பகுதிகளில் இச் சங்கம் கஷ்ட நிவாரண வேலைகள் செய்திருக்கிறது. இந்து சமயத்தினரும் மிகவும் கட்டுப்பாடான முறையில் ஆக்கவேலை செய்யக் கூடியவர்கள் என்பதை உறுதியாக நிலைநாட்டியது இந்தச் சங்கமே.

இச் சங்கத்தார் கதிர்காமத்தில் கட்டி முடித்திருக்கும் மடம், அந்தக் கிராமத்தில் மிகச் சிறந்த மாளிகையாக நல்ல தோற்றத்துடன் அமைந்திருக்கிறது. அதில் இரண்டு பகுதிகள் உள்ளன. முன் பகுதியில் பிரார்த்தனைக் கூட்டங்கள், கதாப் பிரசங்கங்கள், சமய சம்பந்தமான சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்குரிய ஒரு மண்டபமும், அலுவலக அறையும், நூல் நிலையமும், தண்ணீர்ப் பந்தலும், (தண்ணீர் என்றால், வெறும் தண்ணீரைக் கொடுக்க மாட்டார்கள். தோடம் பழச் சாறும், மோரும், 'சர்க்கரைத் தண்ணீரும்' தருகிறார்கள்) பக்தர்கள் தங்குவதற்கு 20 அறைகளும் உள்ளன. இந்த அறைகளில் எச்சமயத்தவரும் தங்கலாம்; வாடகை கிடையாது. ஆனால் ஜன நெருக்கடி அதிகமுள்ள காலங்களில் குழந்தைகளுக்கும் பெண்களுக்குமே அறைகளில் இடம் கொடுக்கப்படும். "சந்தோசம்" கொடுத்து உதவி பெறக் கூடாது. (இலங்கையில் சந்தோசம் என்பது லஞ்சத்தின் மறு பெயர்.) பின் பகுதியில், சாப்பிடும் இடங்களும், சமையல் அறைகளும் உள்ளன. மின்சார உற்பத்தி நிலையமும், முதல் சிகிச்சை நிலையமும், தண்ணீர்க் குழாய்களும் உள்ளன. இவற்றுக்கு நான்கு லட்ச ரூபாய் ஆகியிருக்கிறது. இந்தியாவிலோ, இலங்கையிலோ இவ்வளவு சிக்கனமாக அரசாங்கத்தாரால் கட்டிடம் கட்ட இயலாதென்று நமது ஹைகமிஷனர் ஸ்ரீ வி. வி. தேசாய் கூறினார். இலங்கை அரசாங்கத்திற்காகக் கட்டப்படும் கட்டிடங்களின் மதிப்போடு ஒப்பிட்டுப் பார்த்தால் இதற்கு எட்டு லட்சம் ஆகியிருக்க வேண்டுமென்று நிதி மந்திரி ஜே. ஆர். ஜெயவர்த்தனா சொல்லுகிறார்.



கதிர்காமத்தில் ராமகிருஷ்ண சங்கத்தார் கட்டியுள்ள மடம்.

மடம் கட்டுவதற்கான தொகையை எல்லாச் சமயத்தவரும் நன் கொடையாக வழங்கியிருக்கிறார்கள். இவ்வாறு நன்கொடை தந்தவர்களுக்கும் சமையற்காரர் முனியாண்டிக்கும் நன்றி கூறி ஒரு அறிக்கையைக் கதிர்காம மடத்தின் நிர்வாக சபைக் காரியதரிசியும் சுப்ரீம் கோர்ட்டு டிப்டி ரிஜிஸ்ட்ராருமான நவரத்தினம் படித்தார். முனியாண்டியும் அவருடைய ஆட்களும் இல்லாவிட்டால், நடந்த பல ஆண்டுகளாக இராமகிருஷ்ண சங்கத்தார் கதிர்காமத்துக்கு வரும் தமிழர்களுக்கும் சிங்களவருக்கும் அறுசுவை உண்டியை எப்படி வழங்கியிருக்க முடியும்?

12–7–53 ஞாயிறன்று புதிய மடத்தின் திறப்பு விழா நடைபெற்றது. காலை 7–30 மணிக்கு, திசமகராமவுக்கு வந்து சேர்ந்தோம். நூற்றுக் கணக்கான மோட்டார்கள் ஒன்றன்பின் ஒன்றாகச் சென்று கொண்டிருந்தன. பிரதம மந்திரியின் காரும், அவரைப் பாதுகாப்பதற்காகச் சென்ற போலீசுக்காரர்களின் கார்களும் சென்றதால், நாங்களும் இந்த ஊர்வலத்தில் சேர்ந்துதான் செல்ல வேண்டியதிருந்தது. எட்டு மணிக்குப் பிறகே மாணிக்க கங்கைக் கரையை அடைந்தோம். எங்களுக்குப் பின்னாலேயே வந்து கொண்டிருந்த ஸ்ரீ சி. சி. தேசாய், அவசரமாகக் குளிக்கப் போகிறவர்போல, மாணிக்க கங்கைக்கு வந்தார்; தண்ணீரிலும் வெகு நேரம் நின்றார். ஆனால் குளிக்கவில்லை. ஒரு வேளை இந்திய அரசாங்கத்துடன் கலந்தாலோசித்து அவர்களுடைய முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் போலும் என்று வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தோம். அரை மணி நேரத்திற்குப் பிறகு, தேசாய், சாஸ்திரத்திற்காகத் தலையில் ஒரு சொட்டுத் தண்ணீர் தெளித்துக் கொண்டு, ஷெர்வானி உடையில் மீண்டும் காட்சி யளித்தார். ஸ்ரீ டட்லி சேனநாயகா உள்பட கதிர்காமத்தில் ஏனையோர் எல்லோரும் வேட்டி உடுத்தி யிருந்தனர் என்பதையும் இங்கே அவசியம் குறிப்பிட வேண்டும்.

முருகனுடைய சந்நிதானத்தில் விசேஷ பூஜைகள் நடந்தன. பக்திப் பாடல்கள் பாடப் பெற்றன. பிரதம மந்திரி டட்லி அங்கு சென்று வழி பட்டார். பூஜையில் மடத்தின் வெள்ளிச் சாவி வைக்கப்பட்டிருந்தது. அதைப் பூசாரியிடமிருந்து டட்லி பெற்றுக் கொண்டதும் இராமகிருஷ்ண சங்கத்தினர் அவரை ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். டட்லி மடத்தைத் திறந்து வைத்து, ஆரத்தி எடுத்துக் கற்பூரம் ஏற்றிவைத்தார். பிறகு மந்திரிகள் தண்ணீர்ப் பந்தலுக்குச் சென்று அங்கு கூடியிருந்த மக்களுக்குத் தண்ணீர் கொடுத்து அவர்களுடைய தாகத்தைத் தணித்தார்கள்.

பிறகு ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. இராமகிருஷ்ண மடத்துச் சுவாமிகளும் புத்த சமயத்தைச் சேர்ந்த துறவிகளும், மந்திரிமார்கள் பலரும், தேசாயும், ஸர் கந்தையா வைத்தியநாதனும் சொற்பொழிவாற்றினர். சைவ சமயத்தின் சிறப்பு, சிங்கள மன்னர்கள், பொலன்னறுவையில் தமிழரசாட்சி, நடராஜ வடிவத்தின் பெருமை, இந்தோனேஷியாவில் சோழர் ஆட்சி, இராமகிருஷ்ணரின் வரலாறு, முருகக் கடவுளின் இரு மணங்கள் ஆகிய எல்லாவற்றையும் பற்றி அன்று பேசினார்கள். இடையிடையே, ''அரோகரா'' போட்டுக் கொண்டு பேச்சுக்களை மக்கள் கேட்டு மகிழ்ந்தனர். ஆங்கிலம், தமிழ், சிங்களம் ஆகிய மூன்று மொழிகளிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. ஒரு புனிதமான விழாவில் ''பங்கு பற்றினோம்'', பல தரப்பட்ட அறிஞர்களை ஒருங்கே காணும் வாய்ப்பு ஏற்பட்டது என்ற எண்ணங்கள் யாவர் உள்ளத்திலும் தோன்றின.

இந்தியக் குடியரசின் தலைவர் ராஜேந்திர பாபு மேற்படி விழாவை வாழ்த்தி ஓர் ஆசிச் செய்தி அனுப்பியிருந்தார்.

கதிர்காமத்தைப் பற்றிய ஒரு கிளர்ச்சியும் இந்த விழாவில் எதிரொலித்தது. புத்த கயா இந்தியாவில் இருக்கிறது; கதிர்காமம் இலங்கையில் இருக்கிறது. புத்தகயா பௌத்தர்களுக்குச் சிறப்பாக உரியது. கதிர்காமம் பெரும்பாலும் இந்துக்கள் வழிபடுவது; அங்கு குடிகொண்டிருப்பவர் தமிழ்க் கடவுளாகிய முருகன். அர்ச்சனை முதலியன சிங்களப் பூசாரிகளால் இந்துக் கோவில்களிற் போலவே செய்யப்படுகின்றன. புத்தகயாவின் நிர்வாகம் இந்துக்களிடம் இருக்கிறது. கதிர்காமக் கோவிலின் நிர்வாகம் (சிங்கள மன்னர்களால் நியமிக்கப்பட்ட ஒரு குடும்பத்தின் சந்ததியாரான பஸ்நாயக நிலாமே ரம்புக்போடா, எம். பி. என்னும்) பௌத்தரிடம் இருந்து வருகிறது. கதிர்காம ஆலயம் இந்துக்கள் கைக்கு மாறவேண்டும், அல்லது அதனுடைய நிர்வாகத்தில் இந்துக்களுக்கும் இடமிருக்க வேண்டும் என்ற கிளர்ச்சி பல ஆண்டுகளாக இங்கே இருந்து வருகிறது. இதைப் பற்றி இந்த வாரத்திலும் பத்திரிகைகளில் பல அன்பர்கள் எழுதினார்கள்.

திரு சி. சி. தேசாய் பேசும்போது, ''புத்த கயாவில் இரண்டு மாதங்களாகப் பௌத்த சமயத்தினரும் கோவில் நிர்வாகத்தில் சேர்த்துக் கொள்ளப் பெற்றிருக்கின்றனர்'' என்று மட்டும் குறிப்பாகக் கூறி, மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் ராஜதந்திரமாகத் தம் பேச்சை முடித்தார். அவருக்குப் பிறகு பேசிய தொழில் மந்திரி ஜீ. ஜீ. பொன்னம்பலம் ''தேசாய் புத்தகயாவைப் பற்றிக் கூறினார். அது நமக்கு ஒரு வழிகாட்டியும் ஆகும்'' என்றார். இவற்றைப் பற்றி ஒன்றுமே கூறாமல் டட்லி இன்னும் இராஜ தந்திரமாகப் பேசினார். அவருடைய பேச்சு அந்தச் சூழ்நிலைக் கேற்றதாகவும், தாழ்ந்த குரலிலும், சுருக்கமாகவும், பொதுப்படையாகவும் இருந்தது. 'கதிர்காமம் பல சமயங்களின் ஒற்றுமைக்குச் சின்னமாக விளங்குகிறது. ஒன்றுபடுத்தும் சக்திகள் எவ்வளவு இருந்தாலும் சிறு சிறு வேற்றுமைகளைப் பெரிதாக விளம்பரப்படுத்துவது, உலகில் நாம் காணும் பெரிய குறை. அரசியலில் மட்டுமல்ல, சமூகம், பொருளாதாரம், பண்பாடு, சமயவாழ்வு ஆகிய துறைகளிலுங்கூட இந்தத் தவறான போக்கையே காணுகிறோம்'' என்று ஸ்ரீ டட்லி கூறினார்.

இலங்கையில் இந்து - புத்த சமயப் பிணக்கு ஒன்றுமே யில்லை. தாங்கள் வழிபடும் கோவில் - தாங்கள் பெறும் பொருளை உண்டியலில் போடும் ஆலயம் கதிர்காமம். இத்தகைய தலத்தின் நிர்வாகம் பெரிய செல்வர்களாக இருக்கும் புத்த சமயத்தவர் ஒரு சிலரின் தனிச் சொத்தாக இருக்கக் கூடாது என்பதே அவர்களுடைய கருத்து. இந்துக்களுக்கும் கோவில் மேற்பார்வையில் இடம் கிடைக்கப் புண்ணியத் தலமான கதிர்காமத்து முருகன் கருணை புரிவானாக.

''என் தாயும் எனக்கருள் தந்தையும் நீ
சிந்தா குலமானவை தீர்த்து எனையாள்
கந்தா கதிர் வேலவனே உமையாள்
மைந்தா குமரா மறை நாயகனே''

— கந்தர் அநுபூதி

ஆகஸ்டு மாதத்தில் வெளிவருகிறது!




# சண்டிராணி



Studio... BHARANI

பானுமதி

ராமாராவ்..ரங்காராவ்..ரேலங்கி

டைரக்ஷன்... பானுமதி • தயாரிப்பு... ராமகிருஷ்ண

DISTRIBUTORS :

**MADRAS CITY, TAMILNAD & MALABAR. THE ALL INDIA FILM CORPORATION LTD. MADRAS - 2**

**MADURA & ERNAKULAM**




## 2. விருப்பம் நிறைவேறியது!

மந்திரவாதிக் கிழவன் சொன்னதைக்கேட்ட இளவரசி பிரபாவுக்குப் பயம் தோன்றவில்லை. 'இவன் ஏன் என்னை அழைத்துப் போய் வைத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தான்' என்றே யோசிக்கலானாள். இதற்குத் தகுந்த காரணம் ஏதாக இருக்கக்கூடும் என்று எத்தனை நேரம் யோசித்தும் அவளால் கண்டு பிடிக்க முடியவே இல்லை.

"ராஜகுமாரி, என்ன யோசனை பலமாக இருக்கிறது? இனிமேல் என்ன முயன்றாலும் அரண்மனைக்குப் போக முடியாது. காட்டிலிருக்கும் என் வீட்டில்தான் வசித்தாக வேண்டும். அங்கே உங்களுக்கு எல்லாச் சௌகரியங்களும் இருக்கும். கவலைப் படாதீர்கள்!" என்றான் மந்திரவாதி.

இதற்கு ராஜகுமாரி எவ்வித பதிலும் சொல்லாமல் மௌனமாக நின்றாள். ஆம், அவளுக்கு மந்திரவாதியுடன் போக வேண்டும் போலவுமிருந்தது; போக வேண்டாம் போலவுமிருந்தது.

மந்திரவாதியுடன் சென்றால், அவன் நல்ல நல்ல கதைகள் சொல்வான், கேட்கலாம்; மந்திர ஜால வித்தைகள் செய்து காண்பிப்பான், பார்க்கலாம் அல்லவா? அதனால் மந்திர வாதியுடன் செல்ல ஆசையிருக்கத்தான் செய்தது.

அதே சமயம், அரண்மனையில் அப்பா அம்மா எல்லாரையும் விட்டு விட்டுப் போகிறோமே! அவர்கள் தன் மறைவைக் குறித்துக் கவலைப் பட மாட்டார்களா? இப்படி நினைத்தபோது மந்திரவாதியுடன் போக அவளுக்கு விருப்பம் இருக்கவில்லை.

ஆனால் மந்திரவாதி, இளவரசி பிரபாவின் விருப்பத்தையோ, விரும்பாததையோ சற்றும் பொருட் படுத்த வில்லை. அந்தக் கிழவன் தன் விருப்பத்தைப் பற்றித்தான் நினைத்தான். அதனால் பிரபாவதியின் கையைப் பிடித்துக் கொண்டு, "வா, பிரபா, போவோம்!" என்றான்.

இரண்டு பேரும் நடந்தனர். வெகு நேரம் நடந்தனர். நடந்து போகும் போது முன்பெல்லாம் ராஜகுமாரி 'நச்சு' 'நச்சு' என்று கேள்வி மேல் கேள்வி கேட்டு நச்சரிப்பாளே, அந்த மாதிரி ஒரு கேள்வி கூடக் கேட்க வில்லை. நடக்க நடக்க, நேரம் ஆக ஆக அவள் நெஞ்சை ஏதோ அடைத்தது. கண்களில் கண்ணீர் இப்பொழுது விழுமா, அடுத்த கணம் கீழே விழுமா என்று யோசித்த வண்ணம் தேங்கி நின்றது. கால்களில் ஏற்பட்ட வலி கொஞ்ச நஞ்சமல்ல. வயிற்றில் குடலை பிடுங்கித் தின்னும் பசி.

இந்த நிலையில் இளவரசி பிரபா என்ன செய்ய முடியும்? அவளோ, எட்டு வயதுச் சிறுமி. அரண்மனையில் பிறந்து வளர்ந்தவள். இத்தகைய கஷ்டங்கள் அனுபவித்து அறியாதவள். எனவே, வயிற்றுப் பசியும், கால் வலியும் பொறுக்கக் கூடிய அளவுக்கு மிஞ்சிப் போய் விடவே, மயக்கம் அடைந்து கீழே சாய்ந்தாள்.

ராஜகுமாரி கண் விழித்துப் பார்த்த போது தான் ஒரு கட்டிலில் மெத்தையில்



படுத்திருப்பதை உணர்ந்தாள். 'நான் மந்திரவாதியுடன் அல்லவா காட்டில் நடந்து வந்தேன்? காட்டில் ஒரு மரத்தடியில் அல்லவா மூர்ச்சையாகி விழுந்தேன்? பின், எப்படி நான் கட்டிலில் படுக்க நேர்ந்தது? இந்த மெத்தை எங்கிருந்து வந்தது? ஒருவேளை என்னை யாராகிலும் அரண்மனைக்கே கொண்டு வந்து விட்டார்களோ?' என்று நினைத்து ஒரு கணம் அற்ப சந்தோஷமடைந்தாள். அதற்குள் அங்கு கிழமந்திரவாதி வந்து விட்டான். "என்ன, பிரபா! நன்றாகத் தூங்கினாயா? இப்பொழுது உன்னுடைய கால் வலியெல்லாம் எப்படியிருக்கிறது?" என்று அன்புடன் கேட்டான்.

அப்பொழுதுதான் பிரபாவதிக்குத் தன் உண்மை நிலைமை பிடிபட்டது. அவள் மந்திரவாதிக்குப் பதில் சொன்னாள்:

"தாத்தா, உடம்பு வலியெல்லாம் அவ்வளவாக இல்லை. குறைந்து விட்டது. ஆனால் வயிற்றுப் பசிதான் அப்படியே இருக்கிறது" என்றாள்.

மந்திரவாதிக்குப் பிரபா, தன்னைத் தாத்தா என்று கூப்பிட்டதில் உண்டான சந்தோஷம் இவ்வளவு அவ்வளவல்ல. ஏனெனில் கிழவன் தன் வாழ்க்கை முழுதும் தன்னந் தனியாக இருந்தே கழித்தான். அவன் தன் சிறு வயதில் தாய் தந்தையரின் அன்பைப் பெற்றதில்லை. பிறகு நல்ல இளமைப் பருவம் வந்த காலத்தும், கல்யாணம் கார்த்திகை என்று செய்து கொண்டு மனைவி, மக்கள், சுற்றத்தார் என்று அந்த அன்பையும் இன்பத்தையும் பெற்று அறியான். அப்பொழுதெல்லாம் இவற்றை யெல்லாம் ஒரு பொருளாக அவன் மதித்ததே கிடையாது. ஆனால் இப்பொழுது, நல்ல முதுமைப் பருவம் வந்த இந்தக் காலத்தில், தான் அன்பு செலுத்தவும், அன்பைப் பெறவும் தன்னுடன் யாராகிலும் இருந்தால் தேவலை என்று அவனுக்குத் தோன்றியது. இந்த ஏக்கம் நாளுக்கு நாள் அதிகமாகியது. இதற்காக வேண்டி 'இப்பொழுது கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன்' என்றால் யாராகிலும் பெண் கொடுக்க முன் வருவார்களா? அல்லது எந்தப் பெண்தான் கிழவனைக் கல்யாணம் செய்து கொள்ள முன் வருவாள்? கல்யாணம் என்பது நடக்க முடியாத காரியம் என்று தீர்மானித்தான். யாருடைய குழந்தையையாகிலும் எடுத்து வளர்க்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

இப்படியிருந்த போதுதான் ஒரு மாதத்திற்கு முன்பு பிரபாவதியை மந்திரவாதி அரண்மனைத் தோட்டத்தில் பார்க்க நேர்ந்தது. அவளைப் பார்த்ததிலிருந்து கிழவனுக்கு எப்படியாகிலும் அவளைத் தான் வளர்க்க வேண்டும் என்று தோன்றி விட்டது. அவள் பேச்சு, கண்களிலிருந்த குறுகுறுப்பு, உள்ளப் பாங்கு எல்லாம் பிடித்து விட்டது. இவளைப் பிடித்து வந்த பிறகு, தன் சொல்லைக் கேட்காமல் பிடிவாதம் பிடித்து அழிச்சாட்டியம் செய்தால் தன் மந்திர வித்தைகளை யெல்லாம் காண்பித்துப் பயமுறுத்தித் தன் வழிக்குக் கொண்டு வருவது என்று தீர்மானித்திருந்தான். ஆனால் அத்தகைய தொந்தர வெல்லாம் வைக்காமல் பிரபாவதி எடுத்த எடுப்பிலேயே, "தாத்தா" என்று கூப்பிட்டு விட்டாள். அந்தச் சொல்லில், அந்தக் குரலில் ஒரு பேத்தியின் அன்பெல்லாம் இருப்பதை யுணர்ந்தான். தான் நினைத்தது, விரும்பியது யாவும் இவ்வளவு சீக்கிரத்தில் நிறைவேறி விட்டதில் அவன் அடைந்த சந்தோஷம் இவ்வளவு அவ்வளவு என்று கணக்கிட்டுச் சொல்லத் தான் முடியுமா?

"பிரபா, உனக்கு வேண்டிய வசதிகள், ருசியான சாப்பாடு, பழவகைகள் எல்லாம் இருக்கின்றன. எழுந்திருந்து வா" என்று சொல்லிச் சாப்பாட்டு அறைக்கு அழைத்துச் சென்றான் கிழவன்.

அன்றைய தினத்திலிருந்து பிரபா கிழவனிடம் அன்புடனேயே நடந்து கொண்டாள். கிழவனும் பிரபாவின் மீது உயிரையே வைத்திருந்தான் என்று சொல்ல வேண்டுமா!

ஆனால் ஒவ்வொரு சமயம் பிரபாவுக்குத் தன் பெற்றோர் நினைவு வராமற் போகவில்லை. முதலிரண்டு ஆண்டுகள் வரை தன் பெற்றோர்களை நினைத்துக் கிழவனுக்குத் தெரியாத ஓர் இடத்தில் போய் அழுது விட்டு வருவாள். பிறகு அதுவும் நின்று போயிற்று. நாளடைவில் அவள் தான் ஓர் அரசகுமாரி என்பதையே மறந்து போனாள். இப்படி வருஷங்கள் ஆறு சென்றன.

(தொடரும்)

எங்கும்... எந்நேரமும்...

# ப்ரூக் பாண்ட் தேயிலை




நித்தமும் வேகமே
வருதலால் புத்தம் புதியது

103/B.B.

# 13-வது அகில இந்திய காதி, கைத்தறி சுதேசி, கைத்தொழில் பொருட்காட்சி

(சேலம் நகர சபையால் நடத்தப்படுவது)

## இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள்

தினசரி மாலை 6-30 மணிக்கு

○●○

| | | |
|---|---|---|
| 2-8-53 ஞாயிறு | ஸ்ரீமதிகள் கௌரி கனகசபாபதி, ஜெயலட்சுமி | பாட்டு |
| 3-8-53 திங்கள் | கும்பகோணம் மைதிலி & பார்ட்டியார் | பாட்டு |
| 4-8-53 செவ்வாய் | கொச்சி சகோதரிகள் (ஸ்ரீமதிகள் என். சரோஜா, என். சகுந்தளா) | நடனம் |
| 5-8-53 புதன் | ஸ்ரீ டி. எஸ். துரைராஜ் & பார்ட்டியார் | "கவியுலகம்" (நாடகம்) |
| 6-8-53 வியாழன் | ஸ்ரீ டி. எஸ். துரைராஜ் & பார்ட்டியார் | "டி. எஸ். பி." (நாடகம்) |
| 7-8-53 வெள்ளி | முனிசிபல் ஆபீஸர்ஸ் டிரமாடிக் அசோஸியேஷன் சேலம் | "அசோகன்" (நாடகம்) |
| 8-8-53 சனி | ஸ்ரீமதிகள் லலிதா, பத்மினி, ராகினி & கோஷ்டியார் | நடனம் |
| 9-8-53 ஞாயிறு | ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் | பாட்டு |
| 10-8-53 திங்கள் | குமாரி தங்கமணி | நடனம் |
| 11-8-53 செவ்வாய் | ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் & கோஷ்டியார் | "பணம்" (நாடகம்) |
| 12-8-53 புதன் | குமாரி சுசீலா (நடன ஆசிரியர்: பி. எஸ். கோபாலகிருஷ்ணன்) | நடனம் |
| 13-8-53 வியாழன் | ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர், ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி & கோஷ்டியார் (ஹார்மோனியம்: ஜி. ராமநாதன்) | "பவளக்கொடி" (நாடகம்) |
| 14-8-53 வெள்ளி | குமாரி கமலா (பொள்ளாச்சி) (நடன ஆசிரியர்: பி. எஸ். கோபாலகிருஷ்ணன்) | நடனம் |
| 15-8-53 சனி, 16-8-53 ஞாயிறு | சாவாஸ் ஸ்டேஜ் சர்வீஸ் (எஸ். வி. சகஸ்ரநாமம், சிவாஜி கணேசன், வி. கே. ராமசாமி, எம். பண்டரிபாய், எம். என். ராஜம், மைனாவதி பாய் நடிப்பது) | "கண்கள்" (நாடகம்) |
| 17-8-53 திங்கள், 18-8-53 செவ்வாய் | சிவாஜி நாடக மன்றம் (எஸ். வி. சகஸ்ரநாமம், சிவாஜி கணேசன், எஸ். எஸ். ராஜேந்திரன், வி. கே. ராமசாமி, எம். என். ராஜம், ரத்னமாலா நடிப்பது) | "பராசக்தி" (நாடகம்) |
| 19-8-53 புதன் | ஷை | "என் தங்கை" (நாடகம்) |
| 20-8-53 வியாழன் | குமாரி துளசி | நடனம் |
| 21-8-53 வெள்ளி, 22-8-53 சனி | முத்தமிழ் கலா வித்வரத்ன டி. கே. எஸ். சகோதரர்கள் | "இரத்த பாசம்" (நாடகம்) |
| 23-8-53 ஞாயிறு | முத்தமிழ் கலா வித்வரத்ன டி. கே. எஸ். சகோதரர்கள் | "தமிழ்ச் செல்வம்" (நாடகம்) |

பொருட்காட்சி கமிட்டியார்




அன்புள்ள நண்பருக்கு,

என் தகப்பனாருக்குத் தாங்கள் எழுதிய கடிதம் பார்த்தேன். உங்கள் கல்யாணத்துக்குப் பெண்ணைத் தேர்ந்தெடுக்க நீங்கள் கடைப் பிடித்த வழி மிகவும் நூதனமாயிருக்கிறது. என்னை நேரில் பார்க்காமலே மணந்து கொள்ள இசைந்த மனப் பான்மையை எப்படிப் புகழ்வது என்றே எனக்குத் தெரியவில்லை. ஒரு அபலைப் பெண்ணின் முகத்தைக் கூடப் பார்க்காமல் மணந்து கொள்ள மனமுவந்த தங்களுக்கு இந்த ஏழைப் பெண் எப்படி நன்றி கூறுவது என்று தெரியவில்லை. அந்த உணர்ச்சிப் பெருக்கில்தான் தங்களுக்குக் கடிதம் எழுதத் துணிந்தேன்.

ஏழைக் குடும்பத்தில் பிறந்த எனக்கு விவாகம் செய்துவிட வேண்டும் என்று என் தகப்பனார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் கொஞ்ச நஞ்சமல்ல. என்னைப் பார்க்க வந்த வரன்கள் என்னைப் படுத்திவைத்த பாட்டைச் சொல்லி முடியாது.

சிலர் பாட்டுப் பாடச் சொன்னார்கள்; சிலர் வீணை வாசிக்கத் தெரியுமா என்றார்கள்; ஒரு வரன் 'என் அக்கா பார்த்துச் சம்மதிக்க வேண்டும். அக்காளை அனுப்பி வைக்கிறேன்' என்றார். இன்னொரு வரனின் தகப்பனார், 'பெண்ணை எங்கள் ஊருக்கு அழைத்து வர முடியுமா? அது எங்களுக்குச் சௌகரியமாயிருக்கும்!' என்று எழுதினார்.

இதனாலெல்லாம் மனம் வெதும்பிப் போன நான், விவாகமே வேண்டாம் என்ற தீர்மானத்துக்கு வந்து விட்டேன். அப்பா என் தீர்மானத்தை ஆதரிக்கா விட்டாலும், வேறு வழி ஒன்றும் தோன்றாமையால் பிரமை பிடித்தவர் போல் மௌனமாயிருந்து விட்டார். நான் கலாசாலையில் சேர்ந்து படித்து இண்டர்மீடியட் தேறினேன். வீட்டில் பொழுது போகாமல் பிறகு ஒரு கம்பெனியில் டைப்பிஸ்டாக வேலைக்கு அமர்ந்தேன்.

என் தகப்பனாருக்கு மாத்திரம் எனக்கு விவாகம் செய்து வைத்துவிட வேண்டும் என்னும் ஆசை இருந்தது. ஏதேதோ முயற்சிகள் செய்து வந்தார். இந்தச் சமயத்தில் உங்கள் விளம்பரம் பத்திரிகையில் வந்தது. அப்பா அதற்குப் பதில் எழுதினார். பிறகு உங்களிடமிருந்து போட்டோவுடன் பதில் வந்தது. ராஜா மாதிரி யிருக்கும் உங்கள் படத்தைப் பார்த்ததும் எனக்கு மிகவும் கவலையாய்ப் போய்விட்டது. என்னைத் தங்களுக்குப் பிடித்திருக்க வேண்டுமே என்றுதான் நான் பயந்தேன். அதற்கு ஏற்றாற் போல் நீங்கள் என் போட்டோவையும் அனுப்ப வேண்டாம் என்று எழுதிவிட்டீர்கள். என் இருதயம் பட பட வென்று அடித்துக் கொள்ளுகிறது. இந்தக் கடிதத்தை என்னால் எழுதவே முடியவில்லை. என் கைப்படக் கடிதம் எழுத வேண்டும் என்ற தங்கள் நிபந்தனைக்கு உட்பட்டு ஏதோ எனக்குத் தோன்றியபடி எழுதி யிருக்கிறேன்.

என்னைப் பற்றித் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள வேறொன்றும் இல்லை. என் கடிதத்தில் ஏதேனும் பிழை யிருந்தால் மன்னிக்க வேண்டுகிறேன்.

தங்கள்,

கோகிலம்

இந்தக் கடிதம் கோபாலனுக்கு மனப் பாடம் ஆகிவிட்டது. அவன் இருதயத்தை உருக்கிவிட்டது. அந்தக் கடிதத்துக்குப் பின் வருமாறு பதில் எழுதினான்:

அன்புள்ள கோகிலம்,

உன் கடிதத்தைப் பார்த்ததும், நான் அடைந்த சந்தோஷத்தைச் சொல்லி முடி

யாது. நான் உன் தகப்பனாருக்கு எழுதின கடிதத்தைப் படித்துவிட்டு என் விருப்பப்படி எனக்குப் பதில் எழுதின உன் பெருந்தன்மைக்கு நான் எப்படி நன்றி சொல்லுவது என்று தெரியவில்லை. என் மனசில் போட்டு வைத்திருந்த திட்டப்படி உன்னிடம் நான் விரும்பும் யோக்கியதாம்சங்கள் யாவும் நிறைந்திருக்கின்றன. ஆகையினால் அப்பாவிடம் சொல்லி விரைவில் நம் விவாக முகூர்த்தத்துக்கு ஏற்பாடு செய். நான் உன்னைக் கல்யாணத்தின்போது நேரில் பார்க்கிறேன்.

உன் அன்புள்ள
கோபாலன்

இந்தக் கடிதத்தை எழுதித் தபாலில் சேர்த்த பிறகுதான் அவனுக்கு மனநிம்மதி ஏற்பட்டது.

கோபாலன் வெகு நாட்களாக விவாகம் செய்துகொள்ளாமல் இருந்ததற்குக் காரணம் பொருளாதாரப் பிரச்னைதான். அவன் தாயார் அவனை விவாகம் செய்து கொள்ளச் சொல்லி இடையறாது நச்சரித்து வந்தாள். எத்தனையோ பெண்களைப் பார்த்தான். கோபாலன் எந்தப் பெண்ணுக்கும் தன் மனசில் இடந்தரவில்லை. மாதச் சம்பளம் எல்லாமாகச் சேர்ந்து நூற்றைம்பது ரூபாய் வந்துகொண்டிருந்தது அவனுக்கு. இந்தச் சம்பளத்தில் இன்னொரு ஆத்மாவைக் குடும்ப அங்கத்தினரோடு சேர்த்துக் கொள்ள அவனுக்குத் தைரியம் வரவில்லை. தன் தாயாரும் தானுமாக இப்பொழுது நடத்தி வரும் வாழ்க்கையின் அமைதி அப்போது கெட்டு விடும் என்று அவன் பயந்தான். ஆனால் தாயாரோ அவனை விடுவதாயில்லை. கல்யாணத்தைப் பற்றிச் சமயம் நேர்ந்த போதெல்லாம் வற்புறுத்திக் கொண்டேயிருந்தாள்.

கடைசியில் அவன் தன் விவாகத்துக்கு ஒரு நிபந்தனை ஏற்படுத்திக் கொண்டான். அதாவது, பெண் பார்வைக்கு எப்படியிருந்தாலும் சரி, உத்தியோகத்திலிருக்கும் பெண்ணைத்தான் மணந்து கொள்ள வேண்டும் என்பதுதான் அந்த நிபந்தனை. அவன் தாயாருக்கு இந்த நிபந்தனையில் விருப்பம் இல்லாமல் இருந்தும் கூட, தன் மகன் எப்படியாவது கல்யாணம் செய்து கொண்டால்போதும் என்கிற எண்ணத்தோடு சம்மதித்தாள்.

கோபாலனுடைய லட்சியமெல்லாம் ஒன்றுதான். குடும்பமாகிய வண்டியைக் கணவனும் மனைவியும் சேர்ந்துதான் இழுக்க வேண்டும் என்று அவன் உறுதியாக நம்பினான். குடும்பப் பொறுப்பைக் கணவன் — மனைவி இருவரும் சேர்ந்து கூட்டுறவு முறையில் வகிப்பது என்று ஏற்பட்டு விட்டால் எந்த இளைஞனும் கல்யாணத்தை நினைத்துப் பயப்பட வேண்டியதில்லை என்பது அவன் அபிப்பிராயம். அதற்கு மனைவி படித்தவளாகவும் உத்தியோகத்தில் இருப்பவளாகவும் இருக்க வேண்டும் — என்பதுதான் அவனுடைய உறுதியான தீர்மானம்.

கோபாலனும் எத்தனையோ பெண்களைப் பார்த்தான். ஒன்றும் சரிப்படவில்லை. அதனால்தான் மேலே சொன்ன முடிவுக்கு வந்து அதன்படி கோகிலத்தைத் தேர்ந்தெடுத்தான்.



புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் கொண்டு வந்ததைப் பாராட்டும் பொருட்டுக் கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் அவர்களுக்கு வான்கார்டு இன்ஷூரன்ஸ் கம்பெனித் தலைவர் ஸ்ரீ எச். டி. ராஜா எம். பி. 'உட்லண்ட்ஸ்' ஹோட்டலில் ஒரு சிற்றுண்டி விருந்துபசாரம் நடத்தினார். சென்னை நகரிலுள்ள அரசியல் பிரமுகர்கள், பிரபல உத்தியோகஸ்தர்கள் பலரும் விஜயம் செய்திருந்தார்கள். அச்சமயம் ஸ்ரீ எச். டி. ராஜாவும் அவருடைய இளம் புதல்வரும் அகமும் முகமும் மலர்ந்து முதன் மந்திரி ராஜாஜியை வரவேற்ற காட்சியைப் படத்தில் காணலாம்.

ஒரு பெண்மணியின் உள்ளக் கருத்தை அறிந்து கொள்ள அவன் கைப்பட எழுதிய கடிதம் பெரிதும் துணை புரியும் அல்லவா? அதற்காகத்தான் கோகிலத்துக்கு அந்த நிபந்தனை விதித்தான்.

சிரஞ்சீவி கோபாலனுக்கும் சௌபாக்கியவதி கோகிலத்துக்கும் ஒரு சுப முகூர்த்தத்தில் விவாகம் நடந்தேறியது.

படித்த மனைவி, அதுவும் உத்தியோகத்தில் இருப்பவளாகக் கிடைத்ததில் கோபாலன் மனம் பூரித்துப் போனான். இரண்டு பேர் சம்பளத்தையும் கூட்டிப் பார்த்து, தன் பொருளாதார நிலையின் கணிசமான உயர்வை எண்ணி அவன் அடைந்த

திருப்தியைச் சொல்லி முடியாது. இவ்வளவும் போதாக்குறைக்கு, கோகிலம் நல்ல அழகி. அவள் வனப்பு, கோபாலனின் நிபந்தனையைக் கூடத் தளர்த்தியது.

கோகிலத்தின் மனம் ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்து விட்டது. இதுவரையில் அவள் அநுபவித்து வந்த கஷ்டங்கள் எல்லாம் தொலைந்தன என்று எண்ணி மகிழ்ந்தாள்.



தில்லி தமிழ்ச் சங்கத்தின் சத்திய மூர்த்தி நினைவு நூல் நிலையத்துக்கும் வாசக சாலைக்கும் இம்மாதம் 15-ம் தேதி இலங்கைப் பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தனர். படத்தில் சங்கத்தின் தலைவர் டாக்டர் கே. என். கிருஷ்ணன், ஸ்ரீமதி சுந்தரி நடேசன், இலங்கை தபால் மந்திரி ஸ்ரீ எம். நடேசன், இலங்கை உணவு உப மந்திரி ஸ்ரீ குமாரஸ்வாமி முதலியவர்களைக் காணலாம்.

கோகிலமும் அவள் தாய் தந்தையரும் தம்புச்செட்டித் தெருவில் ஒரு பெரிய வீட்டில் பத்துக் குடித்தனங்களுக்கு மத்தியில் பதினோராவது குடித்தனமாக இருந்தனர். வயது வந்த பெண்ணாகிய கோகிலம் அந்த ஒண்டுக் குடித்தனத்தில் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல; அவள் காலையில் எழுந்து பல் தேய்க்கப் போனால் ஒரு 'கசமுச' பேச்சு; காப்பிப் பாத்திரங்களைக் குழாயடியில் அலம்பப் போனால் ஒரு விஷமப் பார்வை; நல்ல புடவை உடுத்திக் கொண்டு ஆபீஸுக்குப் போனால் ஒரு எரித்துவிடும் பார்வை—இப்படிக் குடியிருப்பவர்கள் அவள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டனர். இந்த மகா ஜனங்கள், நல்ல வேளையாகத் தன் புருஷன் வீட்டுக்கு வந்துவிட மாட்டார்களல்லவா? ஒருவருடைய தொந்தரவும் இல்லாமல், கோபாலனுடன் அவன் சொந்தப் பங்களாவில் ஏகபோகமாகச் சுற்றி வந்து மகிழலாம் என்று நினைத்துக் கோகிலம் குதூகலமடைந்தாள்.

கல்யாணம் முடிந்த நாலு நாட்களுக்கெல்லாம் கோபாலன் அவளைப் பரங்கிமலைக்குத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான்.

அந்த அழகிய பங்களாவில் கோபாலனும் அவனுடைய தாயாரும்தான் இருந்தனர். கோபாலனின் அத்தை சமையலை கவனித்துக் கொண்டாள். கோகிலத்துக்கு அந்தப் பங்களாவை மிகவும் பிடித்துப் போய் விட்டது. நல்ல காற்றோட்டமான அழகிய பங்களா அது. பங்களாவைச் சுற்றி அற்புதமான தோட்டம் இருந்தது. கோகிலம் அங்கு போய்ச் சேர்ந்ததும் மிதமிஞ்சிய உற்சாகத்துடன் இருந்தாள்.

மறு நாள் பொழுது புலர்ந்தது. கோபாலன் ஸ்நானம் செய்து, சாப்பிட்டு விட்டு உடை அணிந்து கொண்டு ஆபீஸுக்குப் புறப்படத் தயாரானான். ஐந்து நிமிஷம், பத்து நிமிஷம், அரை மணி நேரம் காத்திருந்தான். அவனால் அதற்கு மேல் பொறுமையுடன் இருக்க முடியவில்லை.

"கோகிலம், கோகிலம்!" என்று பலமாக அழைத்தான்.

கோகிலம் பரபரப்புடன் ஓடிவந்தாள். "ஏன்? டிபன், ஆபீஸுக்கு எடுத்துச் செல்லும் பை எல்லாவற்றையும் தயாராக எடுத்து வைத்து விட்டேனே! இன்னும் என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம், கோகிலம்! நீ ஆபீஸுக்குப் போக வேண்டாமா? இன்னும் எத்தனை நாளைக்கு லீவு இருக்கிறது?" என்று கேட்டான் கோபாலன்.

"எனக்கு லீவு கிடையாது. நான்தான் உத்தியோகத்தையே ராஜினாமாச் செய்து விட்டேனே!" என்றாள்.

"என்ன, வேலையை ராஜினாமாச் செய்து விட்டாயா? ஏன்? என்னத்துக்காக அப்படிச் செய்தாய்?" என்று கோபாலன் பதறிப் போய்க் கேட்டான்.

உடனே கோகிலம் மிகவும் சாவதானமாக, "என் கல்யாணம் நடக்கிறவரையில்தான் உத்தியோகம் பார்ப்பது என்று நான் தீர்மானம் செய்து கொண்டிருந்தேன். என்னை யாராவது மனமுவந்து கல்யாணம் செய்து கொண்டு இந்த உத்தியோகத் தொல்லையிலிருந்துவிடுதலை அளிக்கமாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருந்தேன். நீங்கள் என் நிபந்தனையை நிறைவேற்றினீர்கள். தினம் பஸ்ஸில் ஏறி இடிபட்டுக் கொண்டு யாரால் ஆபீஸுக்குப் போய்விட்டுவர முடிகிறது!" என்று கூறி அலுத்துக் கொண்டாள்.

கோபாலனுக்கு இதற்கு என்ன பதில் சொல்லுவது என்றே தெரியவில்லை.

சென்னை சர்க்காரின் பப்ளிக் பிராஸிக்யூட்டர் ஸ்ரீ வி. டி. ரங்கசாமி ஐயங்காரின் புதல்வர் ஸ்ரீ. வி. டி. கிருஷ்ணமூர்த்திக்கும் மைசூர் ரயில்வேயின் ரிடையர்டு ஜெனரல் மானேஜர் ஸ்ரீ எச். ரங்காச்சாரின் குமாரி சௌ. மணிக்கும் ஜூலை 8வ. சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடந்தது. சென்னை கவர்னர், ஸ்ரீ ராஜாஜி, மற்றும் மந்திரிகளும், நீதிபதிகளும், பிரமுகர்களும் விஜயம் செய்து ஆசி கூறினர். அன்று மாலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நிகழ்ந்தது. வாழ்க மணமக்கள்.



# மணியின் தோழன்

**பீஷ்மன்**

மணி ஐந்து அடித்தது.

கையில் பிரித்து வைத்துக் கொண்டிருந்த துப்பறியும் நாவலை மூடி வைத்து விட்டு, ஈஸிசேரில் நிமிர்ந்து உட்கார்ந்தாள் சரோஜினி அம்மாள். நாவலுலகின் மயக்கத்திலிருந்து விடுபட அவளுக்குச் சற்று நேரம் பிடித்தது. இரு கைகளையும் உயர்த்திச் சொடுக்கி, சோம்பல் முறித்துக் கொண்டாள்.

முகத்தைத் திருப்பி, பார்வையை ஹாலின் உட்புறம் ஓடவிட்டவாறே "மணீ! டேய், மணீ......!" என்று கூப்பிட்டாள். உள்ளேயிருந்து ராஜபாளையம் நாய்க் குட்டியொன்று நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஓடி வந்து அவளருகே நின்றது. வாலை ஆட்டிக் கொண்டு முகத்தை நிமிர்த்தி, தன்னைப் பரிவுடன் பார்த்த மணியை ஆசையுடன் அள்ளியெடுத்து மடிமீது வைத்துக் கொண்டு அதன் நெற்றியில் முத்தமிட்டாள் அவள். அப்பொழுதுதான் குளித்து விட்டு வந்திருந்த மணியின் உடலின் மொரமொரப்பைத் தன் கையினால் தடவி அனுபவித்துக் கொண்டே "டேய் அங்கு, மணி அஞ்சடிச்சது காதில் விழல்லே? இன்னம் உள்ளளே என்ன செய்யறே!" என்று இரைந்தாள்.

மணி பேசாமல் அவள் கையை நக்கிக் கொடுத்துக் கொண்டிருந்தது.

"இதோ வந்துட்டேன் அம்மா!" என்று கூவிக் கொண்டே கையில் நாயின் கழுத்துச் சங்கிலியுடன் ஓடிவந்தான் அங்கப்பன்.

"ஒவ்வொரு வேலைக்கும் சொல்லித்தான் தெரியணுமாடா? உம். புறப்படு சீக்கிரம்! வர வர நீ ரொம்ப சோம்பேறியாயிட்டே!" என்று சொல்லி விட்டு மணியின் நெற்றியில் மறுபடியும் ஒரு முத்தம் இட்டு அதைக் கீழே இறக்கி விட்டாள். நாயின் கழுத்தில் கிடந்த வளையத்தில் சங்கிலியின் ஒரு முனையைப் பிணைத்து மற்றொரு முனையைத் தன் கையிலெடுத்துக் கொண்டு "நான் வரேம்மா!" என்றான் அங்கப்பன்.

சரோஜினி அம்மாள் அவனுக்குப் பதில் சொல்லவில்லை.

"குட்ஈவினிங் மணி! சமர்த்தாப் போயிட்டு வரணும் தெரியுமா?"—வாய் கொள்ளாப் புன்னகையுடன் மணிக்கு விடை கொடுத்தனுப்பினாள் அம்மாள்.

நாயும் அவள் பேச்சைப் புரிந்து கொண்டதைப் போலத் தலையாட்டிக் கொண்டே அவனைத் தொடர்ந்தது.

அங்கப்பனுக்கு இப்போது இருபத்தைந்து வயதாகிறது. அவனுக்கு அறிவு தெரிந்த நாளிலிருந்து அவன் அவர்கள் வீட்டில்தான் வேலை செய்து வந்தான். ராமசாமி முதலியாருக்கும் சரோஜினி அம்மாளுக்கும் குழந்தை குட்டி ஒன்றும் கிடையாது. அம்மாளின் ஸ்ரீதனமும், முதலியாரின் பூர்விக சொத்துமாய் ஐசுவர்யம் நிரம்பி வழிந்தது. போதாக் குறைக்கு முதலியாரின் வக்கீல் தொழிலில் அவ்வப்போது 'லம்பா'ய் வந்து விழும் பணம் வேறே! இவ்வளவு இருந்தும் முதலியாரின் அற்புத குணம் அவரது நெருங்கிய பந்துக்களைக் கூட அருகே அண்டவிடாதபடி செய்து விட்டது. சந்தான பாக்கியம் வேண்டி அவர்கள் செய்யாத முயற்சியில்லை. சேவியாத கோவிலில்லை. கடைசியில் அவரே சளைத்துப் போய் விட்டார்.

இந்தத் தருணத்தில் தான் அம்மாளின் தோழி, அல்லூர் 'லேடீஸ் க்ளப்' காரியதரிசி மிஸ். சுகன்யா மணமுவந்து ஒரு ராஜபாளையம் நாய்க் குட்டியைச் சுவீகாரமாக அவர்களிடம் கொணர்ந்து கொடுத்தாள். சரோஜினி அம்மாள் அந்த நாய்க் குட்டியைத் தன் வயிற்றுப் பிள்ளையாகவே மதித்து 'மணி' என்று செல்லப் பெயரிட்டுச் சீராட்டத் தொடங்கினாள். 'மணியை யாராவது 'அது இது' என்று பேசி விட்டால் கூட அவளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு விடும். மரியாதையுடன் "மணி சாப்பிட்டானோ, மணி தூங்கினானோ?" என்று விசாரிக்க வேண்டும். அத்தனை செல்லம்.

அங்கப்பன் தான் பிறந்து சில வருஷங்களிலேயே தாயையும் தகப்பனையும் விழுங்கி விட்டான். ஆகவே, எட்டுவயது முதலே தன் தகப்பனாரின் பூர்விக சொத்தான முதலியார் வீட்டுச் சுற்று வேலையை அவன் ஏற்றுக் கொண்டு விட்டான். அவனுக்குச் சம்பளம் என்று பணமாக ஒன்றும் கிடையாது. மூன்று வேளைச் சாப்பாடு போடுவார்கள். வேஷ்டி, சட்டை கிழிந்தபோது வாங்கிக் கொடுப்பார்கள். தோன்றிய போதெல்லாம் திட்டும் வசவுமாய் அர்ச்சனை செய்வார்கள். அவனுக்குக் குறிப்பிட்ட வேலை ஒன்றும் கிடையாது. அவர்கள் எது செய்யச் சொன்னாலும் செய்ய வேண்டும். முதலியார்வாளின் 'ரிஜிஸ்தர்'ஆகாத அடிமை அவன். அவ்வளவு தான். இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், முதலியார் அவனை வெளி உலகைப் பற்றி அறிந்து கொள்ளச் சந்தர்ப்பமே தரவில்லை. அதனால் அவனும் 'இதுதான் உலகம்' என்ற சுயமாகப் பிறந்த வேதாந்த சாரத்தைக் குடித்துக் கொண்டு காலத்தை ஓட்டி வந்தான்.

மணியைக் கவனித்துக் கொள்ளும் விஷயத்தில் மட்டும் அவனுக்கு நிரந்தரமான கால அட்டவணை உண்டு. எது எப்படிப் போனாலும் சாயங்காலம் நாலரை மணிக்கு மணியை சோப்புத்தேய்த்துக் குளிப்பாட்டி, 'வாக்கிங்' அழைத்துப் போய்வர வேண்டியது அவனது கடமை. அதற்குப் பால் கொடுப்பது, வேளா

வேலைக்குச் சோறு போடுவது கூட அவன் தான். கொஞ்சும் உரிமை மட்டும் முதலியார் தம்பதிகளின் 'காபிரைட்.'

முதலியார் வீட்டுக் காம்பவுண்டுக் கேட்டைத் தாண்டி நடை பாதைக்கு வந்திருந்தான் அங்கப்பன். மஞ்சள் வெய்யில் அடித்துக் கொண்டிருந்தது. அந்தியை வரவேற்கும் ஆதுரத்துடன் சாலையோரத்து மரங்கள் மூச்சுவிடத் தொடங்கின. சற்று நின்று தன் பின்னால் குதித்தோடி வந்த மணியைப் பார்த்தான் அவன். மணியின் வெள்ளை உடம்பு மஞ்சள் ஒளியில் பளபளத்தது முதுகின் இரு புறத்திலும் திட்டாய் இருந்த கறுப்பு நிறம் தனி அழகுடன் மிளிர்ந்தது. அதன் அருகே போய்ச் செல்வமாய் முதுகைத் தடவிக் கொடுத்து விட்டு மேலே நடந்தான் அவன். மணி வந்ததன் பின்பு, அவனுக்கு இந்தச் சௌகரியமாவது கிடைத்திருந்தது. அதை 'வாக்கிங்' அழைத்துப் போகும் சாக்கில் அவனும் சாயங்காலம் ஒரு மணி நேரம் சுற்ற முடிகிறதே! முன்பெல்லாம் இந்த அவகாசம்தான் ஏது? தவிரவும், எப்போதும் அதிகார முறையிலேயே பழகும் முதலியார் தம்பதிகளிடம் அவனுக்கு இயல்பாகவே சலிப்பு ஏற்பட்டிருந்தது. இப்போது, வாயில்லாவிட்டாலும் உள்ளத்து அன்பைத் தன் குழைவினால் வெளிப்படுத்தும் 'மணி'யின் சிநேகம் அவனுக்குப் பாலைவனப் பசுஞ் சோலையாகத்தான் தோன்றியது. இந்த சிநேகத்திலும் கூட அவனுக்குச் சில இடைஞ்சல்கள். அவன் விரும்பும்போது நாயைத் தன் மடிமேல் எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்ச முடியாது.

எப்பொழுதாவது மத்தியான நேரங்களில் அவன் மணியை எடுத்து வைத்துக் கொண்டிருப்பதைச் சரோஜினி அம்மாள் பார்த்து விட்டாளோ, வந்தது ஆபத்து.

"டேய் மணி! அந்த 'நான்ஸென்ஸ்' உன்னைச் சாக்காய் எடுத்துண்டு மத்த வேலைக்கெல்லாம் மட்டம் போட்டுடப் போறான். நீ இங்கே வாடா, ராஜா" என்று இரைந்து கொண்டே வந்து மணியை அவன் கையிலிருந்து பிடுங்கிக் கொள்வாள். அவர்கள் உத்தரவிட்ட போதுதான் அவன் அதைத் தொடலாம். அங்கப்பனுக்கு இதெல்லாம் மனசுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. 'ஆனாலும் வேறு வழி என்ன?' என்ற கேள்வியை எழுப்பக் கூட அவன் சிந்தனை சக்தி விழித்துக் கொள்ளவில்லை.

என்னவோ தோன்றியது.

நின்று, மணியைத் தூக்கி வைத்துக் கொண்டு நடந்தான். நாயும் அவன் முகத்தை உற்று உற்றுப் பார்த்துக் கொண்டே வாலை ஆட்டியது. ஏதோ குழந்தையைக் கொஞ்சுவது போல, அவனுக்கே புரியாத பாஷைகளில் மணியிடம் கொஞ்சினான் அவன்.

அந்தப் பாதையின் ஓரமாக ஒரு மைல் தூரத்துக்கு வெட்ட வெளி பரவிக்கிடந்தது. அவன் எப்போதும் பாதை யோரமாய் அந்த மைதானத்தின் மறுமுனை வரை சென்று திரும்புவது வழக்கம். அன்று அந்த எல்லையையும் தாண்டி, இன்னும் கொஞ்ச தூரம் போய் விட்டான்.

"டுடும் டுடும்" என்ற மேளச் சப்தம்தான் அவனை உலுக்கி நிறுத்தியது. சாலையோரத்தில் நின்ற பெரிய ஆலமரத்தின் நிழலில் வித்தை காட்டி யொருவன் மணலைக் கயிறுகத் திரித்துக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றி ஒரு சிறு கும்பல் கூடியிருந்தது. அங்கப்பனுக்குச் சபலம் தட்டியது. மணியைத் தோளில் சார்த்திக் கொண்டே அங்கே போய் நின்றான்.

வெற்றுக் கூடையினுள்ளே திடீரென நாகம் படம் விரித்தாடியது.

எச்சில் மாங் கொட்டை செடியாய் வளர்ந்து காய்த்துக் கனிந்தது.

காலிப் பர்ஸிலிருந்து கல கல வென்று நாணயங்கள் உதிர்ந்தன.

வாயைப் பிளந்து கொண்டு வித்தை காட்டியின் மந்திர தந்திரச் செயல்களில் தன்னை இழந்து நின்றான் அங்கப்பன்.

மணி சற்று நேரம் சும்மா அவன் தோளில் சாய்ந்து கிடந்தது. நேரம் போனதே தெரியாமல் அவன் அப்படியே நின்று விடவே அதன் பொறுமை தாளவில்லை. அதற்கேற்றாற்போல, கீழே சற்றுத் தள்ளி ஒரு பெண் நாயொன்று அதைப் பார்த்து வாலை ஆட்டிக் கொண்டு நின்றது. மணியின் ஆண் மனம் என்ன சொல்லிற்றோ! அங்கப்பனைப் பிறாண்டித் தொந்தரவு செய்து கீழே இறங்க முயற்சி செய்தது. வித்தையின் ரஸனையில் தன்னை இழந்திருந்த அங்கப்பனால் மணியின் தொந்தரவைச் சகிக்க முடியவில்லை.

திரும்பிப் பார்த்தான்.

கீழே பெண் நாயொன்று நின்றது. மணி அதனுடன் விளையாடத் துடித்துக் கொண்டிருந்தது. சிரித்துக் கொண்டே மணியைக் கீழே இறக்கி விட்டு விட்டு மறுபடியும் வித்தை பார்க்கத் தொடங்கினான்.

நேரம் தலைதெறிக்க ஓடியது.

'கிறீச்' என்ற அலறல் ஒலி கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினான் அங்கப்பன். கூட்டத்திலே நின்ற சிறுவனொருவன் தான் அப்படி அலறினான். தொடர்ந்து நாயின் பரிதாப ஊளை எழுந்தது. கண் மூடிக் கண் திறப்பதற்குள் அவனுக்கு விஷயம் விளங்கிவிட்டது. ரோட்டிற்கு ஓடினான்.

காலிலிருந்து ரத்தம் சொட்ட, கழுத்துச் சங்கிலி தரையில் புரள, மணி "லொள் லொள்" என்று குரைத்துக் கொண்டு அங்கே நின்றது. அருகே ஒரு கார்.

அங்கப்பன் ஓடிப்போய் நாயைத் தூக்கிக் கொண்டு, காரை ஓட்டி வந்த மனிதரை முறைத்துப் பார்த்தான்.

"ஏய்யா, இப்படித்தான் நாயைத் தெருவிலே விட்டுட்டுக் கூத்துப் பார்க்கப் போயிடறதா?" என்று அவனை அதட்டிவிட்டு அந்தக் கனவான் காரை ஓட்டிக்கொண்டு பறந்து விட்டார்.

அங்கப்பனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. மணியைப் பரிதாபமாகப் பார்த்தான். நாயும் அவனைப் பார்த்தது.

கூட்டத்திலிருந்த சிலர் அவனை நன்றாகத் திட்டினர். அவனது அஜாக்கிரதைக்காக அவனும்தான் வருத்தப்பட்டான். ஆயினும்...

கழுத்துச் சங்கிலியின் ஒரு முனை தன் கையில் இருப்பதாக நினைத்துக் கொண்டேதான் அவன் மணியைக் கீழே இறக்கி விட்டிருந்தான். ஆனால் தன்னை மறந்து நின்ற அந்த நிலையில் சங்கிலியையும் கைநழுவ விட்டு விட்டான்.

முதலியாரை நினைத்ததும் அவனுக்குப் பகீர் என்றது.

கூட்டத்திலே நின்ற மனிதர்களெல்லாம் நாய்க்கு இரக்கப் பட்டனர். ஒருவராவது அவனது நிலைமைக்கு அனுதாபப் படவில்லை.

நடந்தது நடந்து விட்டது. இனி, யோசித்துக் கொண்டே நின்றால்...

தன் அரை வேட்டியின் ஒரு முனையில் கிழித்து நாயின் காலில் ஒரு கட்டுக் கட்டினான். குரைக்கும் நாயைத் தன் தோளில் சார்த்திக் கொண்டு முதலியார் வீட்டை நோக்கி ஓடினான்.

காம்பவுண்டுச் சுவரை அணுகும்போது உள்ளேயிருந்து ஒரு கார் ரோட்டிற்கு விரைந்து வந்து கொண்டிருந்தது. அங்கப்பன் ஒதுங்கி நின்று காரை உற்றுக் கவனித்தான். மணியின் காலை ஒடித்த அதே கார்தான்.

"அய்யய்யோ, அந்த மனுசனுக்கு முதலியாரைத் தெரியுமா...?"

அங்கப்பனின் நெஞ்சுத் துடிப்பு நின்று விட்டது போலிருந்தது.

தள்ளாடி வீட்டுக்குள் நுழைந்தான். அவனெதிரே, கண்கள் கனல் கக்க, வாய் வசை மாரி பொழிய முதலியார் தம்பதிகள் யம கிங்கரர்களாய் வந்து நின்றனர்.

"வக்கீல் நாகசாமி வந்து எல்லாம் சொல்லித் தொலைச்சுட்டான். அப்படி யென்னடா கூத்து உனக்கு! நாயைக் கவனிச்சுக் கூட்டிக்கிட்டுப் போகாமே தெருவிலே விட்டுக் காலை ஒடிச்சுட்டியேடா. கழுதை! நாகசாமியின் காரா யிருந்ததனாலே இன்னிக்கு மணி பிழைச்சான். நம்ம நாயின்னு தெரிஞ்சதும் உடனே 'பிரேக்' போட்டானாம்" என்று இரைந்தார் முதலியார்.

சரோஜினி அம்மாள் நாயை எடுத்து வைத்துக் கொண்டு பிலாக்கணமே பாடத் தொடங்கி விட்டாள்.

"அவனுக்கு இத்தனை நாளாகத் தண்டச் சோறு போட்டதுக்கு என் ராஜா காலை ஒடிச்சுப் போட்டாயே! மூஞ்சியிலே முழிக்காமே ஒழிஞ்சு போடா, சோம்பேறி!" என்று ஆவேசத்துடன் அலறினாள் அவள்.

அங்கப்பன் முதலியார் காலில் விழுந்து தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். அவன் கண்ணீர் முதலியாரின் மூடக் கோபத்தைத் தான் இன்னும் மூட்டி விட்டது. கையிலிருந்த 'வாக்கிங் ஸ்டிக்'கைச் சுழற்றத் தொடங்கினார்.

"இன்னியோடே உனக்கும் எனக்கும் எல்லாம் அத்துப் போச்சு. ஆமாம். ஓடு, ஓடு! நில்லாதே! என் மூஞ்சியிலே முழிச்சா பஸ்பம் தான்!" என்று உறுமினார் அவர். கோபம் வந்தால் அவர் சாக்ஷாத் ருத்ரமூர்த்தி தான். அங்கப்பன் பரிதாபமாய் மணியை ஒரு தடவை பார்த்தான்.

"ஊ...ம்...!" என்று அடித்தொண்டையால் மறுபடியும் உறுமினார் முதலியார்.

"இங்கே நின்னு வயித்தெரிச்சலைக் கொட்டிக்காதே! ஓடு!" என்று அழுகையும் ஆத்திரமுமாய் அலறினாள் சரோஜினி அம்மாள்.

அங்கப்பன் அப்புறம் அங்கே நிற்கவில்லை.

பார்வையை மறைக்கும் கண்ணீருடன் அன்று முதலியாரின் வீட்டை விட்டுப் போனவன் தான்.

அப்புறம் அவன் அந்த ஊர்ப்பக்கம் தலை காட்டவேயில்லை.

★

வருஷங்கள் எத்தனையோ ஓடிவிட்டன.

திருநெல்வேலியில் நடந்த ஒரு சிநேகிதர் வீட்டுக் கலியாணத்துக்கு முதலியார் தம்பதிகள் வந்திருந்தனர்.

இருட்டுப் பரவும் வேளை.

தாமிரவருணி ஆற்றுக் கரையோரமாய் மணலில், சரோஜினி அம்மாள் தன் அருமை மணியைச் சங்கிலியால் பிணைத்துக் கூட அழைத்துக் கொண்டு நடந்து வந்து கொண்டிருந்தாள். கல்யாண வீட்டுப் புதுப் பழக்கமான வேறு ஒரு அம்மாளும் அவள் கூட வந்தாள். மணி சர்வ சாதாரணமாய் நடந்தது. காலப் போக்கில் அதன் கால் புண் நன்றாக ஆறிப் போய் இப்போது இடமாகக் கால் பாவி நடந்தது.

சரோஜினி அம்மாள் தன்னுடன் வரும் பெண்மணியிடம் மணியின் குண சிலாக்கியத்தைப் பற்றிப் பிரமாதமாக அளந்து கொட்டிக் கொண்டிருந்தாள்.

திடீரெனத் தரையை முகர்ந்து பார்த்துவிட்டு மணி சற்று நின்றது. கைச் சங்கிலி பின்னுக் கிழுக்கவே சரோஜினி அம்மாளும் நின்று திரும்பிப் பார்த்தாள். மணி தலையை மணலில் கிளறிக் கிளறி பூகோள ஆராய்ச்சி செய்தது.

"என்னடா மணி, என்ன தேடறே?" என்று கேட்டுக் கொண்டே அதன் அருகே வந்தாள் சரோஜினி அம்மாள்.

தரையை நன்றாக ஒருமுறை முகர்ந்து விட்டு நாய் பின்னுக்குத் திரும்பி ஓடத் தொடங்கியது.

அம்மாளின் கை, சங்கிலியைத் திடமாகப் பற்றிக் கொண்டிருந்ததால் மணியால் மேலே ஓட முடியவில்லை. திமிறிக் கொண்டு குரைத்து முரண்டு பண்ணியது.

கூட நின்ற அம்மாள் சொன்னாள்.

“இங்கே அவனுக்கு ஏதாவது காதல் ஏற்பட்டிடுச்சோ, என்னமோ! அவ அங்கே எங்கானும் வந்திருப்பா. அதுதான் திமிறிக் கொண்டு ஓடறான். கொஞ்சம் விட்டுத்தான் பாருங்களேன்”

சரோஜினி அம்மாளும் சிரித்துக் கொண்டே கைச் சங்கிலியை விட்டுவிட்டாள்.

மணி அவர்களைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே அவர்கள் வந்த வழியே சென்று இடது புறத்திலிருந்த ஒற்றையடிப் பாதையில் திரும்பி ஓடியது.

“நீங்க சொன்னதைக் கேட்டு மணியை விட்டுட்டேனே, அம்மா! அவன் எங்கே போயிட்டானோ, தெரியலையே!” என்று அங்கலாய்த்துக் கொண்டே மரங்கள் இருபுறமும் செழித்து அடர்ந்திருந்த ஒற்றையடிப் பாதையில் விரைவாக நடந்தாள் சரோஜினி அம்மாள்.

“நான் சொல்லறேன், கேளுங்களேன். உங்க மணி இங்கே எங்கேயோ ‘லவ்’வைத் தேடித்தான் போயிருக்கு!” என்றாள் கூட வந்த அம்மாள்.

திடீரென “அதோ மணி” என்று இரைந்தாள் அவள். அந்த அம்மாள் சுட்டிய திக்கில் மணி தலையைக் குனிந்து உட்கார்ந்திருந்தது. அதன் பக்கத்தில் ஒரு தாடியும் மீசையும் வளர்ந்து உடம்பு ஒட்டிக் கிடந்த மனிதன் ஒருவன் இருந்தான். அவன் கைகள், நாயின் முதுகைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தன.

சரோஜினி ஓடிப் போய் மணியின் கழுத்துச் சங்கிலியைக் கையில் சுற்றிக் கொண்டு அதை இழுத்தாள். அப்போது அவள் பார்வை அந்தப் பிச்சைக்காரன் முகத்தில் விழுந்தது. அந்த முகம் தனக்கு நன்றாக அறிமுகமான முகமாக இருக்கிறதே என்று ஒரு கணம் நினைத்துத் தயங்கினாள். அடுத்த கணம், தன் தோழியின் எதிரில், சரோஜினி அம்மாள் அந்தப் பிச்சைக்காரன் தனக்குத் தெரிந்தவன் என்று காட்டிக் கொள்ள விரும்பவில்லை. தன்னை உடனே சமாளித்துக் கொண்டாள்.

“சீ பைத்தியம்! இருந்திருந்து உன் புத்தி போச்சே எவனோ ஒரு பிச்சைக்காரன் பக்கத்தில் வந்து குந்திக்கொண்டு......ரொம்ப லட்சணமா இருக்கு!” என்று அதட்டிக் கொண்டே மணியைப் பிடித்து இழுத்தாள்.

அந்தப் பிச்சைக்காரனையும் அவளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே நடந்தது மணி.

“இவன் எவனோ ஒரு பிச்சைக்காரனா? நம்ம அங்கப்பன்தான் என்பது உங்களுக்கு நினைவு வரவில்லையா?” என்று கேட்பது போல் மணி பலமாகக் குரைத்ததைச் சரோஜினி அம்மாள் புரிந்து கொள்ளவில்லை.

வலுக் கட்டாயமாய் அதைப் பிடித்திழுத்துக் கொண்டு நடந்தாள் அவள்.

# படித்துப் பாருங்கள்!

## அருவிக்கரை ஆசிரமம்

அவன் ஓர் இந்தியன்; ஆனால் இங்கிலாந்தில் ஆங்கிலேயர்களின் சூழ் நிலையில் பிறந்து வளர்ந்தவன். அவனை எல்லோரும் ஆங்கிலேயன் என்றே நம்பியிருந்தனர்; ஐரோப்பியப் பெண்ணான அழகி ஸ்டெல்லாகூட அப்படி நம்பித்தான் அவனைக் காதலித்தாள் அவனும் அவளை மனப்பூர்வமாகக் காதலித்தான். ஆனால் அவனுள் அடங்கிக் கிடந்த இந்திய ரத்தம் அவனை இந்தியன் என்றே நினைவூட்டிக் கொண்டிருந்தது. அந்த நினைவு அவனையும் அறியாமல் ஒருநாள் வெளிப்பட்டது. வெளிப்பட்டதுடன் நிற்காமல் போரையும் புயலையும் கிளப்பி விட்டது. அந்தச் சமயம்தான் ஓர் இந்தியக் கனவானுடைய நட்பும் அவருடைய மனைவி தேவகியின் நட்பும் அவனுக்குக் கிடைத்தன.

அந்த நட்பு அவன் உள்ளத்தில் எத்தகைய மாறுதலை ஏற்படுத்தியது! அப்புறம் ஸ்டெல்லாவின் நட்பு என்னவாயிற்று! அருவிக்கரை ஆசிரமத்தை நிறுவியது யார்! மேற்படி ஆசிரமத்தில் நிகழ்ந்த கோரக் கொலைக்குப் பொறுப்பாளி யார்!

மேற்படி பரபரப்பான கேள்விகளுக் கெல்லாம் சுவாரஸ்யமான பதில்களை இந்தப் புத்தகத்தைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம்.

ஹிந்தியில் எழுதியவர்: சுதர்சன்; மொழி பெயர்ப்பு: ரா. வீழிநாதன்; பிரசுரம்: அமுத நிலையம், சென்னை - 18 விலை: ரூ. 1-8-0.

## சூறாவளி

படித்த மாத்திரத்தில் மனத்தில் இடம் பிடித்துக் கொள்ளும் எட்டுச் சிறு கதைகள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன. அபாக்கியவதி மீனாக்ஷியை மீண்டும் பாக்கியவதியாக்க முயன்ற அவள் தந்தை எத்தகைய மாறுதலை அடைந்தார்! மீனாக்ஷியின் மனத்தில் வீசிய புயல் எத்தகையது என்பது “சூறாவளி”யில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. “பாலம்”, “நம்பிக்கை”, “வயிறு அறிந்தது”, “தாயத்து” முதலிய கதைகளும் சுவை தரும் வண்ணம் புனையப் பட்டிருக்கின்றன.

எழுதியவர்: “மாயாவி”; பிரசுரம்: அமுத நிலையம், சென்னை—18; விலை: ரூ. 1—8—0.

## ரமா

புதிதாகப் புக்கத்துக்குப் போன ரமா, அங்கே தினசரி நடக்கும் ரஸமான நிகழ்ச்சிகளை யெல்லாம் தன் தோழி கீதாவுக்குக் கடிதங்களாக எழுதித் தள்ளுகிறாள். மாமியாரைப் பற்றியும், நவ நாகரிக நாத்தனாரைப் பற்றியும், மாமனாரைப் பற்றியும், பணக்கார இடத்திலிருந்து வந்த ஓரகத்தியைப் பற்றியும் சுவாரஸ்யமாக அவள் எழுதியிருப்பது ஒரு கதையாகிவிடுகிறது.

எழுதியவர்: “குங்குமம்;” பிரசுரம்: அமுத நிலையம், சென்னை 18; விலை: ரூ. 1—6—0.




"என்ன பேசாமல் உட்கார்ந்திருக்கிறீர்கள்? இந்த வருஷமாவது லலிதாவின் கலியாணத்தை நடத்த வேண்டாமா?"

"நடத்த வேண்டியதுதான்."

"பேசாமல் உட்கார்ந்து கொண்டிருந்தால் அது தானாக நடந்து விடுமா?"

"என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய், ஜானகி! கையில் இருப்பதோ ரொம்பக் குறைவு. எந்த வரனைப் பார்த்தாலும் காலாயிரத்தைக் கொடு, ஐயாயிரத்தைக் கொடு என்று கேட்கிறார்கள்."

"அதற்காகத்தான் சொல்லுகிறேன், எங்க அண்ணா பிள்ளை கோபாலனுக்கே கொடுத்து விடலாமென்று. ஏன்? கோபாலனுக்கு என்ன குறைச்சல்?"

"அவனுக்கு ஒன்றும் குறைச்சலில்லை. உன் அண்ணாதான் வருகிறவர்களிடமெல்லாம் ஜம்பு விரலைக் காட்டுகிறானும்."

"அசலிடத்திலிருந்து வருகிறவர்களுக்கு அப்படிக் காட்டினால், நமக்குக் கூடவா அப்படிக் காட்டுவான்?"

"எனக்கு அவனிடம் போகப் பிடிக்கவில்லை. நீ வேண்டுமானால் போய்க் கேட்டுப் பார். உன்னிடம் கொஞ்சமாவது பிடி கொடுத்துப் பேசினால், பிறகு நான் போய் மற்ற சீர்வகைகளைப் பற்றிப் பேசி முடிவு செய்கிறேன்."

"அதையும் போய்ப் பார்த்து விடுகிறேன். எதையும் நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ளுவது நல்லது பாருங்கள்." சிறிது நம்பிக்கையுடனே வெளிவந்தன இந்த வார்த்தைகள் ஜானகியிடமிருந்து. ஆனால் ராமஸ்வாமிக்கு அதில் கொஞ்சம்கூட நம்பிக்கையில்லை.

தன் அம்மாவும் அப்பாவும் பேசிக்கொண்ட ஒவ்வொரு வார்த்தையும் கூடத்து அறையில் மேஜை விரிப்பில் "எம்பிராய்டரி" வேலை செய்து கொண்டிருந்த லலிதாவின் செவிகளில் விழுந்தது. ஏன்தான் இவர்களுக்கு இந்த ஆசையோ? இனம் இனத்தோடு சேரும் என்ற பழமொழிக் கேற்ப, பணக்கார மாமா பணக்கார வரனாகத்தான் பார்ப்பார். அவர் தன்னுடைய பழைய ஸ்திதியை மறந்தே போய் விட்டார். அம்மா மட்டும் இன்னமும் நம்பிக்கை வைத்திருக்கிறாள் என்று நினைத்தபோது சிரிப்புத்தான் வந்தது லலிதாவுக்கு. இதே மாமா முன்பு ஒரு சமயத்தில் அம்மாவிடம் உதவி கேட்க வந்த சம்பவம் அவள் மனத் திரையில் தோன்றியது.

லலிதாவுக்கு அப்போது சுமார் எட்டு வயதிருக்கும். ஜானகியும் ராமஸ்வாமியும் செல்வத்தில் புரண்டுகொண்டிராவிட்டாலும் தங்களுடைய ஒரே அருமைப் பெண்ணான லலிதாவை ஆசையும் பாசமுமாகத்தான் வளர்த்து வந்தார்கள்.

அந்தச் சமயத்தில் தான் கிராமத்திலிருந்து ஜானகியின் அண்ணா ராமநாதன் சகோதரியின் வீட்டிற்கு வந்திருந்தான். வெகு நாளைக்கப்புறம் தன் வீட்டுக்கு வந்திருந்த தன் தமயனிடம் அளவு கடந்த வாத்ஸல்யத்தை வாரிச் சொறிந்தாள் ஜானகி.

அன்று மத்தியானம் அண்ணனும் தங்கையும் சாவகாசமாக உட்கார்ந்து தங்கள் கிராமத்து விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஜானகி, "என்னண்ணா! கோபாலனின் படிப்பு எந்த மட்டி லிருக்கிறது?" என்று சிரத்தையுடன் கேட்டாள்.

"இந்த வருஷம் பரீட்சை பாஸாகி விட்டது. மேல் படிப்பைப் பற்றித்தான் இனிமேல் யோசிக்க வேண்டும்."

"ஏன், காலேஜுக்கு அனுப்பேன்."

"அதற்குப் பண வசதி வேண்டாமா? ஜானகி! ஊரில் குடும்பம் நடத்துவதே ரொம்ப சிரமமா யிருக்கிறது. நான் எப்படி கோபாலனைக் காலேஜில் சேர்க்க முடியும்?"

"இதற்கு வேறு வழியே யில்லையா? நீதான் இரண்டு காணி நிலத்தை நம்பிப் படிக்காமல் இருந்து விட்டு இப்போது கஷ்டப்படுகிறாய். உன் குடும்பத்திற்கு அந்த இரண்டு காணி நிலம் எப்படிப் போதும்.

படித்திருந்தால் ஏதாவது உத்தியோகமாவது பார்க்கலாமே. நீ படுகிற கஷ்டம் போதாது என்று கோபாலனையும் எஸ். எஸ். எல். ஸி. யோடு நிறுத்திவிடப் போகிறாயா? இந்தக்



காலத்தில் இந்தப் படிப்பிற்கு மதிப்பே கிடையாதே" என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தாள் ஜானகி.

"அதைத்தான் நானும் யோசிக்கிறேன். ஒரு வழியும் தோன்றவில்லை. அதிருக்கட்டும். நம்ப ஊர் வீரப்பக் கவுண்டரின் மருமகன் சாமியப்பக் கவுண்டர் இந்த ஊரில் ஒரு கண்டிராக்ட் எடுத்திருக்கிறானும். அதற்கு என்னையும் ஒரு கூட்டாளியாகச் சேரச் சொல்லுகிறான். நிறைய லாபம் கிடைக்குமாம். அதைக் கொண்டு கோபாலனின் படிப்பையும் தொடர்ந்து ஆரம்பிக்கலாம். நம்ப குடும்பமும் இந்த தரித்திர நிலையிலிருந்து மீளும். உன்னிடம் ஒரு இரண்டாயிரம் ரூபாய் இருந்தால் கொடு. பிறகு அதை நான் வட்டியும் முதலுமாகக் கொடுத்து விடுகிறேன்" என்று சுற்றி வளைத்துப் பேசினான் ராமநாதன்.

"என்னையா கேட்கிறாய்? என்னிடம்......"

"நீ லலிதாவுக்குக் கலியாணம் செய்வதற்காக ரூபாய் இரண்டாயிரம் சேர்த்து வைத்திருப்பதாக முன்பு ஊருக்கு வந்திருந்த போது என்னிடம் சொன்னாயே...!"

"அதைக் கொடுத்துவிட்டால் பிறகு லலிதாவின் கலியாணத்திற்கு?"

"நம்ம கோபாலன் இருக்கும்போது லலிதாவுக்கு வேறு வரன் பார்க்க வேண்டுமா? தவிர, கலியாணம் செய்வதற்கு இன்னும் ஐந்தாறு வருஷமிருக்கிறதே, அதற்குள் நான் உன்னிடம் வாங்கிய கடனைத் திருப்பித் தந்து விடுவேன். நீ கவலைப் படாதே!"

ராமஸ்வாமிக்கு இதில் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. "ஜானகி! நமக்கேன் இந்த வம்பெல்லாம். லலிதாவின் பதினைந்துவயதிற்குள் இன்னும் கொஞ்சம் பணம் எப்பாடு பட்டாவது சேர்த்து விட்டால் நமக்குத் தகுந்தபடி யாராவது ஒரு வரனைப் பார்த்து முடித்தால் போகிறது."

"ஏன் கோபாலன் நன்றாகப் படித்துப் பாஸ் செய்து பெரிய உத்தியோகம் வகித்தால் நமக்கு அது நல்லதுதானே? அதுமாதிரி வேறு இடத்தில் பார்த்தால் நிறைய வரதக்ஷிணை கேட்பார்களல்லவா?"

"உன் அண்ணா ஒருமாதிரி பேர் வழி. அவன் ஒரு வேளை பணக்காரனாக ஆகிவிடுகிறான் என்று வைத்துக் கொள். அப்போது உன்னையோ உன் பெண்ணையோ திரும்பிக் கூடப் பார்க்க மாட்டான். வியாபாரத்தில் லாபம் வந்தால் உன் பணம் வந்துவிடும். நஷ்டம் வந்தால்? யோசித்துப் பார். நூறு ரூபாயா, இருநூறு ரூபாயா? இரண்டாயிரம் ரூபாய். அதை அவனால் கொடுக்க முடியாமல் போய் விட்டால் பிறகு நம் நிலை என்னவாகும்? லலிதாவின் விவாகத்துக்கு என்ன செய்வது? சிந்தித்துப் பார்."

ஜானகி, "என் அண்ணாவிடம் அப்படி நம்பிக்கையில்லாமல் போய்விட்டதா உங்களுக்கு! அப்படிக் காசைக் கண்ணால் கண்டதும் மாறிவிடும் பேர்வழியில்லை அவன்! உங்களுக்கு ஒரு கவலையும் வேண்டாம். அவனுக்குச் சமயத்திற்குக் கொடுத்து உதவுங்கள்" என்றாள்.

எப்படியோ கணவனிடம் பக்குவமாகப் பேசிப் பணத்தை வாங்கித் தமயனிடம் கொடுத்து விட்டு, "அண்ணா! லலிதாவுக்குக் கோபாலனைத்தான் நம்பி யிருக்கிறேன். மறந்து விடாதே" என்று கூறினாள்.

"என்ன ஜானகி அப்படிச் சொல்லுகிறாய்? உனக்குக் கொஞ்சங்கூடச் சந்தேகமே வேண்டாம். கோபாலன் உன் மாப்பிள்ளைதான். லலிதா என் மாட்டுப் பெண்தான். இனி மாதிரி உனக்குப் பெண் இருக்கும்போது வேறு இடத்தில்கூடப் பெண் கொள்வேனா?" என்று உறுதியுடன் கூறினான் ராமநாதன்.

ஓரு வருஷம் விரைவில் சென்றது. ஒரு நாள் ராமநாதன் இரண்டாயிரம் ரூபாயைக் கொண்டுவந்து ஜானகியிடம் கொடுத்து விட்டு, தன் 'கன்ட்ராக்ட்' பெருமைகளை யெல்லாம் பேசித் தீர்த்துவிட்டு, கோபாலனைப் பற்றி ஒன்றுமே பேசாமல் ஊருக்குப் போய் விட்டான். மறுமாதமே கிராமத்திலிருந்த தன் குடும்பத்தைச் சென்னைக்கே கொண்டு வந்தான். முதலில் ஐம்பது ரூபாய் வாடகைக்கு ஒரு வீட்டில் குடி புகுந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் சேரத் தொடங்கியதும் மாம்பலத்தில் ஒரு பெரிய பங்களா வாங்கினான். காளடைவில் போக்கு வரத்துக்காக ஒரு 'ப்யூக்' காரும் வாங்கிக் கொண்டான். இப்போது "கன்ட்ராக்ட்" ராமநாதன் என்றால் மாம்பலத்தில் தெரியாதவர்களே கிடையாது என்னும்படி அவன் பொருளாதாரம் மிகவும் உயர்ந்து விட்டது.

கொடிக் கொரு தடவை ஜானகியின் வீட்டிற்கு வந்து கொண்டிருந்த ராமநாதன் இப்போதெல்லாம் வருஷத்திற்கு ஒருதடவை வந்து சென்றாலே பெரிதென்று எண்ணும் படியாகி விட்டது. அவன் மனைவியோ நாத்தனார் வீட்டுத் திக்குப் பக்கம்கூடத் திரும்புவதில்லை. ஐந்தாறு வருஷத்திற்குள் வந்து குவிந்துவிட்ட ஐசுவர்யம் அவர்களை வெகுவாக மாற்றி விட்டது.

காலம் செய்த மாறுதலால் லலிதா பருவ மங்கையானாள். அவளுக்குக் கல்யாணம் செய்யும் வயது வந்த பின்பும்கூட ராமநாதன் ஒரு தடவையாவது வந்து லலிதா-கோபாலன் கலியாண விஷயத்தைப் பற்றிப் பேசாமலிருந்தது ஜானகிக்கு என்னவோ போலிருந்தது. இருந்தபோதிலும் பெண்ணைப் பெற்றவர்கள்தான் தழைந்து போக வேண்டும் என்ற பழைய சம்பிரதாயத்தை ஒட்டித் தன் கணவனிடம் பேச்சைத் தொடர்ந்தாள். அவர்கள் முடிவு செய்ததுபோல் அன்று மாலை தன் அண்ணனின் வீட்டிற்குச் செல்லும் தாயின் நம்பிக்கையும், ஆசையும் இன்னமும் விடவில்லையே என்றெண்ணி மனம் வருந்தினாள் லலிதா.

தமயன் வீடு போய்விட்டு மனமொடிந்து, பெருத்த ஏமாற்றத்துடன் வீடு வந்து சேர்ந்தாள் ஜானகி. அவமானத்தினாலும் துயரத்தினாலும் அவள் உள்ளம் துடித்தது. கண்களில் கண்ணீர் துளித்தது.

"ஏன், என்ன சொன்னான் அண்ணா?"

"என்னத்தைச் சொல்லுவான். அற்பத்திற்குப் பவிஷு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிக்கும் என்பார்களே, அது சரியாகத்தானிருக்கிறது."

"அதுதான் தெரிந்து இருக்கிறதே! அவன் சொன்னதைத்தான் சற்று விளங்கும்படி சொல்லேன்."

"அவன் பிள்ளை ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுதி யிருக்கிறானாம். அவனுக்குப் பெரிய பெரிய இடத்திலிருந்தெல்லாம் பெண்கள் வருகின்றனவாம். 'என்னவோ அவர்கள் குழந்தைகளாக இருக்கும்போது விளையாட்டாகச் சொன்னதை நிஜமென்று நம்பி இப்போது வந்து கேட்கிறாயே! ஒரு ஐ. ஏ. எஸ். காரனுக்குக் குறைந்தது ஒரு பி. எஸ்ஸி. யாவது படித்த பெண்ணாக இருக்க வேண்டாமா? சரி. அது போகட்டும். நான்தான் உன் பணத்தை உடனே திருப்பிக் கொடுத்து விட்டேனே. அதைக் கொண்டு உன் நிலைமைக்குத் தக்க வரனாகப் பாரேன்' என்று கொஞ்சங்கூடப் பழைய விசுவாசத்தை நினைக்காமல் பேசி விட்டான். அவன் பெண்டாட்டியோ, என்னை "வா"வென்றுகூட அழைக்கவில்லை. ஏன்! மாடியை விட்டே கீழே யிறங்கவில்லை அந்த மஹாராணி. அவ்வளவு பணத் திமிர் அவர்களுக்கு. என்னால்தான் இவ்வளவு குபேர வாழ்வு வாழுகிறோம் என்ற எண்ணமே கொஞ்சங்கூட இல்லையே அவர்களுக்கு? என்ன சுயநலக்காரப் புலிகள்" என்று ஆத்திரமும் துக்கமும் போட்டியிடப் பேசித் தீர்த்த ஜானகி தன் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

# பதிலுக்குப் பதில்!



"நான் சொன்னபோது நீ என் அண்ணாவிடம் உங்களுக்கு நம்பிக்கையில்லையா என்று கேட்டுச் சண்டைக்கு வந்தாய். இப்போதாவது தெரிகிறதா உனக்கு, காரியம் ஆகிற வரையில்தான் காலைப் பிடிப்பான் ராமநாதன் என்று!" என்று வெறுப்புடன் வினவினார் ராமஸ்வாமி.

"போதும். இனிமேலும் என்னைக் குத்திக் காட்ட வேண்டாம்" என்ற ஜானகியின் குரல் துயரத்தால் தழு தழுத்தது.

மேலும் இரண்டு வருஷங்கள் சென்றன. லலிதாவுக்குக் கலியாணம்ஆனபாடில்லை. ராமஸ்வாமியும் தேடாத இடங்களில்லை. கையிலிருந்த இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு இரண்டாந்தார வரன்கள்தான் கிடைக்கும் போலிருந்தது. தங்களுடைய ஒரே அருமைப் பெண்ணை அழகும், அறிவும் நிரம்பிய லலிதாவை இரண்டாந்தாரமாகக் கொடுக்க விரும்பாத ஜானகியும், ராமஸ்வாமியும் செய்வதறியாது தவித்துக் கொண்டிருந்தார்கள்.

லலிதாவும் தன்னால் தன் பெற்றோர்கள் படும் மனக் கஷ்டத்தை எண்ணி எண்ணிப் பார்த்துக் கண்ணீர் உகுத்தாள். அன்று ஞாயிற்றுக் கிழமை. மத்தியானம் இரண்டு மணியிருக்கும். வாசலில் நின்று கொண்டிருந்த லலிதா "அப்பா, வாசலில் யாரோ வருகிறார்கள். போய்ப் பாருங்கள்" என்று கூறிக்கொண்டே உள்ளே ஓடி வந்தாள்.

வாசலுக்குப் போனார் ராமஸ்வாமி. அங்கே ஒரு வாலிபனைக் கண்டதும் ""வாருங்கள்..." என்று இழுத்தாற்போல் கூறினார்.

வந்த வாலிபன் "என்னைத் தெரியவில்லையா? ஐந்தாறு மாதங்களுக்கு முன்..." என்று கூறி நிறுத்தவே, "...ஓ! நீங்களா! வாருங்கள். உங்கள் பெயர்கூட ராஜு தானே...?" என்று அழைத்தார் நினைவு வரப் பெற்ற ராமஸ்வாமி. ராஜுவின் அருகில் நின்ற ஒரு அம்மாளைப் பார்த்து, "அது உங்கள் தாயாரா?" என்று வினவியபடி அவர்களிருவரையும் வீட்டினுள்ளே அழைத்து வந்தார்.

"ஆமாம் என் தாயார்தான். முன்பின் தெரியாத ஒருவனை நம்பி ஐம்பது ரூபாயைச் சடக்கென்று எடுத்துக் கொடுத்த தயாநிதியான உங்களைப் பார்க்க வேண்டும் என்று என் தாயார் விரும்பினாள். அதனால் தான் அழைத்து வந்தேன்" என்று நன்றி ததும்பும் உள்ளத்துடன் கூறினான் ராஜு.

அவன் தாயாரை உள்ளே அழைத்துப் போனாள் ஜானகி. லலிதா அவர்களுக்குக் காப்பி தயாரித்துக் கொண்டிருந்தாள். குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்த லலிதாவைப் பார்த்த அந்த அம்மாள், "இவள் உங்கள் பெண்தானே? கலியாணம் ஆகிவிட்டாதா?" என்று ஜானகியைக் கேட்டாள்.

"இனிமேல்தான் ஆக வேண்டும். வரன் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம். யாரைக் கேட்டாலும் ஐந்தாயிரம், ஆறாயிரம் கொண்டா, என்கிறார்கள். அதற்கெல்லாம் நாம் எங்கே போகிறது" என்று மிகவும் அலுப்போடு பதிலளித்தாள் ஜானகி.

அப்போது லலிதா காப்பியைக் கொண்டு வரவே, அவளைப் பார்த்து ஜானகி, "லலிதா! மாமிக்கு நமஸ்காரம் பண்ணம்மா" என்று கூறினாள். நமஸ்கரித்தெழுந்த லலிதாவை 'மகராஜியாக இரு' என்று ஆசீர்வதித்த அந்த அம்மாள் ஜானகியை நோக்கி "உங்களுக்கு என்ன கோத்திரம்?" என்று கேட்டாள்.

"பாரத்வாஜ கோத்ரம். ஏன், உங்களுக்குத் தெரிந்த வரன் ஏதாவது இருக்கிறதா?" என்று வினவினாள் ஜானகி.

"உம்...எங்கள் ராஜுவுக்கு வேண்டுமானால் லலிதாவைக் கொடுங்கள். நான் தாராளமாய்ப் பண்ணிக் கொள்ளுகிறேன். உங்கள் கணவர் ராஜுவுக்குச் சமயத்தில் செய்த உதவிக்கு நாங்கள் எது செய்தாலும் ஈடாகாது."

"அப்படியென்ன செய்தார் இவர்? எனக்கொன்றும் தெரியாதே" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் ஜானகி.

"உங்களுக்கு ஒன்றுமே தெரியாது போலிருக்கிறது. ராஜுவின் தகப்பனார் இறந்துபோய் இருபது வருஷங்களாகிறது. ரொம்பக் கஷ்டப்பட்டோம் நானும் ராஜுவும். நகைகளை விற்று வயிற்றை வளர்த்துக் கொண்டு வந்தோம். நான்கு பெரிய மனிதர்களின் காலைப் பிடித்து ராஜு படிப்பதற்கு 'ஸ்காலர்ஷிப்' வாங்கினேன். அவனும் சிரத்தையாகப் படித்து பி. எஸ். ஸி. பாஸ் செய்து விட்டான் போனவருஷம். பிறகு வேலைக்கு அலைந்தானே அலைந்தானே அப்படி அலைந்தான். இந்த ஊரில் ஒன்றும் கிடைக்கவில்லை. பம்பாயில் ஏதோ ஒரு கம்பெனியில் வேலை காலியிருப்பதாகப் பத்திரிகையில் பார்த்து விட்டு அதற்கு விண்ணப்பம் செய்தான். ஒரு மாதம் கழித்து உடனே வரும்படி ஆர்டர் வந்தது. பம்பாய்க்குப் போக ரயில் சார்ஜுக்கு ஐம்பது ரூபாய் வேண்டும். கையில் காலணாக் கிடையாது. ஒருவர் பாக்கி யில்லாமல் கேட்டுப் பார்த்து விட்டேன். ஒருவரும் கொடுக்க வில்லை. விற்பதற்கோ என்னிடம் ஒரு திருகாணி கூடக் கிடையாது. என்ன செய்கிறது? வந்த வேலையைக் கைநழுவ விட வேண்டியது தான் என்று எண்ணி நானும் ராஜுவும் மனமொடிந்து போய்விட்டோம். பிறகு ராஜு வருத்தத்தோடு எங்கோ வெளியே போனான். அந்தச் சின்னப் பிள்ளையார் கோவிலுக்குப் போய்ப் பிள்ளையார் எதிரில் மனம் வருந்தி வாய்விட்டுக் கூறி அழுதிருக்கிறான். அதைக் கேட்டுக் கொண்டே தற்செயலாய் அங்கு வந்த உங்களகத்துக்காரர் மனமிரங்கிப் போய் ராஜுவிடம் என்ன ஏது என்று விசாரிக்கவே, அவனும் எல்லாவற்றையும் விவரமாய்க் கூறியிருக்கிறான். உடனே அவர் அவனை வீட்டிற்கு அழைத்து வந்து ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்தாராம். அவருடைய கைராசி அவனுக்கு வேலை கிடைத்து விட்டது. இப்போது என்னை அழைத்துக் கொண்டு போக வந்திருக்கிறான்" என்று கூறி முடித்தாள் அந்த அம்மாள்.

"போகட்டும். சமயத்தில் உதவியது இப்போது உங்களுக்குப் பெரியதாகப் பட்டு விட்டது போலிருக்கிறது" என்று பெருமையுடன் மொழிந்தாள் ஜானகி.

"என்னப்பா! நீ அன்று பம்பாய்க்குப் போன காரியம் சாதகமாய் முடிந்ததா?" என்று கேட்டார் ராமஸ்வாமி.

"எல்லாம் உங்களுடைய கைராசிதான். போனவுடனேயே வேலையை ஒப்புக்கொண்டு விட்டேன். பதினைந்து நாட்கள் 'லீவ்' எடுத்துக்கொண்டு அம்மாவை அழைத்துப் போகலாம் என்று நேற்றுத்தான் வந்தேன். அதற்குள் அம்மாவுக்கு......" என்று நிறுத்தினான் ராஜு.

"லீவு முடிகிறதுக்குள்ளே அவனுக்குக் கலியாணம் பண்ணிவிட வேண்டும் என்று எனக்கு ஆசை. உங்களுடைய பெண் லலிதாவுக்கும் இன்னும் கலியாணம் ஆகவில்லைன்னு தெரிகிறது. ராஜுவுக்கும் லலிதாவுக்கும் கலியாணத்தைச் செய்துவிடலாம் என்பது என்னுடைய ஆசை" என்று கூறிக்கொண்டே கூடத்துக்கு வந்தாள் ராஜுவின் தாயார்.

"உங்களுக்கு ஒரே பிள்ளை. நிறையச் சீர் வகையறுக்களை எதிர்பார்க்கக்கூடுமல்லவா?"

"அதெல்லாம் எங்களுக்கு ஒரு ஆசையும் கிடையாது. நல்ல மனிதர்களுடைய சம்பந்தந்தான் பெரிதே ஒழிய, பணமும், படாடோபமுமா பெரிது?" என்றாள் வந்த அம்மாள்.

"சரி உங்கள் இஷ்டம்" என்று சம்மதம் தெரிவித்தபடி ராஜுவை நோக்கினார் அவர்.

ராஜு பர்ஸைத் திறந்து ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுக்கப் போனான் ராமஸ்வாமியிடம். அதை வாங்கிக் கொள்ள மறுத்த ராமஸ்வாமி, "ஒருவருக்குச் சமயத்தில் உதவி செய்ய வேண்டும் என்றெண்ணிக் கொடுத்தேனே தவிர, திரும்பவும் பெற்றுக் கொள்ளும் எண்ணத்துடன் கொடுக்கவில்லை நான். தவிர நீங்கள்தான் இந்த வீட்டின் மாப்பிள்ளையாகி விட்டீரே?" என்றார்.

"சரி, இந்தப் பதினைந்து நாளைக்குள் முகூர்த்தத்தை வைத்து விடுங்கள்" என்று கூறிவிட்டுத் தாயும் மகனும் விடை பெற்றுச் சென்றார்கள்.

"லலிதா அதிர்ஷ்டசாலி. அதனால்தான் மாப்பிள்ளை நம் வீட்டைத் தேடிக்கொண்டே வந்து விட்டான்" என்று பெருமையுடன் கூறிக் கொண்டாள் ஜானகி.

"லலிதாவின் அதிருஷ்டம் ஒரு பக்கம் இருக்கட்டும். நான் சமயத்தில் உன்னைக் கேட்காமல் அவனுக்குப் பணம் கொடுத்து உதவியதால்தான் அவன் என்னைத் தேடிக் கொண்டு வந்தான் தெரியுமா?" என்று கூறித் தம் பரோபகார சிந்தையைத் தாமே புகழ்ந்து கொண்டார் ராமஸ்வாமி.

உள்ளறையில் தேவியின் திருவுருவப் படத்தின் முன்பு நின்றுகொண்டு, "தாயே! எல்லாம் நின் கருணைதான்" என்று கூறியபடி நமஸ்கரித்தாள் லலிதா. அவள் மனதில் எல்லையற்ற ஆனந்தம் பொங்கி வழிந்தது.



## வாழ்க்கையின் இன்பம் அக் கடும் தலைவலி ஒழிந்தபின்

"நான் எப்பொழுதும் தலைவலியால் அவதிப் பட்டுக் கொண்டிருந்தேன். ஒன்றிலும் குணம் கிடைக்கவில்லை. பின்னர் "க்ருஷன்" உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து எனது வலிகள் அறவே ஒழிந்து அநேக விதங்களில் குணமடைந்திருக்கிறேன். மண்டை பிளக்கும் தலைவலியால் வாழ்க்கையே வியர்த்தம் எனக் கருதினேன். ஆனால் அது இப்பொழுது முற்றிலும் வேறு விதமாய் விட்டது — "க்ருஷ"னுக்கு எனது நன்றி." —M. S.

வயிற்றைக் கோளாறு செய்வதும் ரத்தத்தை விஷமாக்குவதுமான அசுத்தங்கள் குடலுக்குள் சேமிக்கப்படுகின்றன என்பதே மண்டை பிளக்கும் தலைவலிகளின் தாத்பர்யம். உங்களது உட்புற அவயவங்களை ஆரோக்கியமாகவும் ஒழுங்காகவும் இயக்குவதால் "க்ருஷன்" அவ்விஷப் பொருள்களை வெளியேற்றி விடுகின்றது. க்ருஷன் உங்களுக்கு வலிகளிலிருந்தும் நோய்களிலிருந்தும் விடுதலை அளிப்பதால் வாழ்க்கையில் புத்துணர்வும் ஊக்கமும் அடைகிறீர்கள்.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் இருக்க உதவுகிறது

KSM—2



# அவள் பைத்தியமா?

தூரத்தே இருந்த டீவுப் ஜெயிலில் பன்னி ரண்டு மணி அடிக்கும் சத்தம் இலேசாகக் காற்றில் மிதந்து வந்தது. எங்கேயோ நாய் குரைக்கும் சத்தம்கூட இப்போது நின்றுவிட்டது. எவ்வளவுதான் நிடசித்தம் உடையவராக இருந்தாலும் அந்த அர்த்த ராத்திரியில் நோயாளிகள் போட்ட கூச்சலைக் கேட்டுத் திடுக்கிடாமல் இருக்க முடியாது.

மெடிகல் வார்டிலிருந்து வந்த முக்கல் முனகல் சத்தமும், "ஐயோ, அப்பா! உயிர் போவுதே!" என்ற புலம்பலும் பிறவியிலேயே நிடசித்தம் உடையவனான என்னைக் கூடப் பயப்பட வைத்தன. நான் டாக்டர் பரீட்சை பாஸ் செய்ததும் அந்த ஊர் சர்க்கார் ஆஸ்பத்திரியில்தான் முதன் முதலாக உத்தியோகம் ஏற்றுக் கொண்டேன். வேலை ஆகிப் பதினைந்து தினமே ஆகியிருந்தது. நேற்றையிலிருந்து எனக்கு இரவு வேலை. இரவு பத்து மணி வரை இரண்டொரு நோயாளிகளுக்கு ஊசி போட்டு விட்டு நாலைந்து பேருக்கு டெம்பரேச்சர் எடுத்து விட்டால் அப்புறம் விடியற்காலை வரை வேலை கிடையாது. சிறிது கண்ணயரலாம். ஆனால் இன்றோ மணி பன்னிரண்டு ஆகியும் ஏதோ வேலை இருந்துகொண்டுதான் இருந்தது. போதாதற்கு இரண்டொரு நோயாளிகள் தூங்காமல் அரற்றிக் கொண்டிருந்தார்கள். கண்ணை ஒரு நிமிடம் மூடினேன். நித்திராதேவி என்னை ஆட்கொள்ளும் சமயம்.

"டாக்டர்! பத்தாம் நம்பர் படுக்கையில் இருக்கும் ஒரு அம்மாளுக்கு ஜன்னி கண்டு ரொம்பவும் பிதற்றுகிறாள். உடனே வர வேண்டும்" என்று நர்ஸ் வந்து கூப்பிட்டாள். அன்றைக்குப் பெண்கள் மெடிகல் வார்டில் இரவு வேலை பார்க்க வேண்டிய லேடி டாக்டர் எதிர்பாராத விதமாய் வேலைக்கு வர முடியாததால் பெரிய டாக்டர் அந்த ஒரு நாள் இரவு மட்டும் அந்தப் பெண்கள் வார்டையும் என்னைப் பார்த்துக் கொள்ளும்படி உத்தர விட்டிருந்தார். நர்ஸ் வந்த வேகத்தைப் பார்த்ததுமே நோயாளி மிகவும் ஆபத்தான நிலையில் இருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டேன்.

ஸ்டெதாஸ் கோப்பை எடுத்துக்கொண்டு அந்த வார்டை நோக்கி ஓடினேன்.

சுமார் ஐம்பது வயது மதிக்கக் கூடிய ஒரு வயதான ஸ்திரீ படுத்திருந்தாள். உடலில் சதைப் பற்றே இல்லாது கிழிந்த நார் போல் கிடந்தாள். கண்களெல்லாம் குழி விழுந்து கிடந்தன. தலையில் இருந்த நரைத்த தலை மயிர்கள் பிடிக்கு அகப்படாமல் பறந்து கொண்டிருந்தன. அவளுடைய நோயின் சரித்திரத்தை அங்கு மாட்டியிருந்த வியாதியஸ்தர் குறிப்பிலிருந்து தெரிந்து கொண்டேன். அவளுக்குப் பித்த பாண்டு. அத்துடன் டைபாய்ட் சுரமும் சேர்ந்து கொண்டது. அன்று இரண்டாவது வாரம் முடியும் நாள்.

அந்த அம்மாள் ஜன்னியில் ஏதேதோ பிதற்றினாள். தலையில் ஐஸ் வைக்கச் சொன்னேன். இரண்டொரு ஊசி போட்டேன். அவள் தன்னைப் போட்டு அரற்றிக் கொண்டாள்.

"இதோ பார், நீ இப்படியெல்லாம் உடம்பைப் போட்டு அலட்டிக் கொண்டால் இலேசிலே சொஸ்தமாகாது" என்றேன்.

"சொஸ்தமாகக் கூடாது என்பதுதானே எனது பிரார்த்தனையும்! எனக்கு எதற்காகச் சொஸ்தமாகணும்! நான் யாருக்காகப் பிழைக்கணும்!" என்றாள். அவள் ஜன்னி போதையில் பேசவில்லை என்பது தெரிந்தது.

"இங்கு இருக்கும் வரை உன்னைச் சௌகரியப் படுத்தி அனுப்ப வேண்டியது எங்கள் பொறுப்பு. நீ குணமாகி வெளியே போனதும் எப்படி வேண்டுமானாலும் இருந்து கொள். எங்களுக்கு ஆக்ஷேபணை இல்லை. ஆனால் இங்கிருக்கும் போது நீ எங்கள் சொல்படித்தான் நடக்க வேண்டும்."

"இந்த அம்மா வந்ததிலிருந்து இப்படித்தான் விரக்தியாகப் பேசறாங்க. சரியான காலத்தில் மருந்தும் சாப்பிடுவதில்லை" என்றாள் நர்ஸ்.

"டாக்டராம், மருந்தாம், ஊசியாம். எனக்கு எதற்கு மருந்து! எனக்கு வியாதியைப் போக்க உங்களிடம் மருந்து கிடையாது. எனக்குத் தெரியும் என் வியாதிக்கு மருந்து. டாக்டர்! ஒரு காரியம் செய்ய முடியுமா! இங்குள்ள டாக்டர்கள் நர்ஸ்கள் எல்லோரையும் கூப்பிடுங்கள். என் கையால் அவர்கள் ஒருவர் பாக்கியில்லாமல் மென்னியை முறித்து விட்டால் என் வியாதி போய் விடும். நான் சாக ஆசைப்படுகிறேன். இவர்கள் தடுக்கிறார்கள்" என்றாள் அவள்.

"சரிதான்! பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டிய நோயாளியை இந்த ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்து விட்டார்களே! இந்தக்

கேஸை பெரிய டாக்டர் பார்க்கவில்லையா!" என்று நர்ஸைக் கேட்டேன்.

"சரியான பேச்சு, டாக்டர்! நீங்கள் ஒருவர் தான் கொஞ்சம் புத்திசாலி. என்னை எங்கே கொண்டு போகச் சொல்கிறீர்கள்!" என்று கேட்டான் அந்த அம்மான்.

"பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு!"

"ஆமாம், டாக்டர்! முப்பது வருடங்களுக்கு முன்பே அங்கு போயிருக்க வேண்டியவன். போகவில்லை. இப்போது தான் எனக்கு அந்தப் பிராப்தம் வருகிறது போலிருக்கிறது!"

"என்ன, முப்பது வருடங்களுக்கு முன்புபோய் இருக்க வேண்டுமா!"

"ஆமாம். அதுதான் என் கதை."

"அதை எனக்குச் சொல்ல முடியுமா!"




"முடியுமாவா! சொல்லுகிறேன். கேளுங்கள். நர்ஸம்மா நீயும் கேள்."

* * *

தஞ்சை ஜில்லாவின் வளம் பொருந்திய ஒரு கிராமம். அதில்தான் என் தாயும் நானும் வசித்து வந்தோம். என் தந்தை சிறு வயதிலேயே இறந்து விட்டார். என் தாயின் உயிர்த்தோழி தான் பக்கத்து வீட்டுக் கல்யாணியம்மாள். அவள் கணவர் ஏராளமான சொத்து வைத்து விட்டு இறந்து விட்டார். கல்யாணி தன் பிள்ளையை நன்றாகப் படிக்க வைத்தாள். அவன் பெயர் ஹரிஹரன். ஹரிஹரனுக்கும் எனக்கும் நான்கு வயதே வித்தியாசம். அவன் உள்ளூர் படிப்பு முடிந்ததும் கலாசாலையில் படிக்கப் பட்டணம் போய்விட்டான். இதற்கிடையில் நானும் மள மளவென்று வளர்ந்து விட்டேன். என் பெயர் ராஜம்.

கல்யாணியம்மாளுக்குத் திடீரென உடல் நலம் சீர்கெட்டது. தான் கண்ணை மூடுவதற்குள் தன் பிள்ளை ஹரிஹரனுக்குக் கலியாணம் செய்து வைத்து விட விரும்பினாள். என்னையே மணப் பெண்ணாகவும் தேர்ந்தெடுத்து ஹரிஹரனுக்கும் கடிதம் எழுதினாள்.

அந்த வருட விடுமுறைக்கு ஹரிஹரன் வந்தான். அவன் தாயாருடன் கலந்து பேசிய போது நான் அதிகப் படிப்போ, நாகரிகமோ இல்லாத பட்டிக்காடு என்றும் அதனால் என்னை மணம் செய்து கொள்ள முடியாது என்றும் தெரிவித்து விட்டான். அவன் தாயார் அவனுடன் வாதாடினாள்.

"இதோ பார், ஹரிஹரா! பெண் பட்டிக்காடு என்பதற்காக எல்லோருமே வேண்டா மென்றால் பட்டிக்காட்டுப் பெண்களுக்குக் கலியாணம் எப்படி ஆகும்! அவ்வளவு பேரும் கன்னிகைகளாகவா இருக்க வேண்டும்! ராஜமோ குடித்தனப்பாங்கு உள்ளவள். நன்றாகக் காரியம் செய்வாள். எங்கிருந்தோ வரப்போகிற ஒரு நாகரிகப் பிசாசுக்காக ஒரு கிராமாந்தரத்து மோகினியை வேண்டாம் என்று சொல்லாதே. பட்டிக்காட்டாளைப் பட்டணத்துக் காரியாக ஆக்குவது உன் கையில்தானே இருக்கிறது!" என்றாள்.

அதற்கு அவன் சம்மதப்படவே இல்லை. வர வர அவன் தாயின் நிலைமை மோசமாகியது.

"ஹரிஹரா! உன்னைப் பெற்று வளர்த்த எனக்கு மன நிம்மதியளிக்கக் கூடாதா! நீ இவளை மணந்து குடியும் குடித்தனமுமாய் இருப்பதை ஒருநாளாவது பார்த்து விட்டுச் செத்தால்தான் என் நெஞ்சு வேகும். அந்தப் பாக்கியம் நான் செய்யவில்லையா! அதற்கு நான் கொடுத்து வைக்காத பாவியாக ஆகி விட்டேனே! நீயோ பெற்று வளர்த்த தாயின் மன நிம்மதியை உன் நாகரிக வாழ்க்கையில் மோதி அதை நிலை குலையச் செய்கிறாய். சொல், ஹரிஹரா! கடைசித் தடவையாகக் கேட்கிறேன். உன் எண்ணம்தான் என்ன!" என்று ஒரு நாள் கேட்டாள்.

தாயின் பரிதாபகரமான வேண்டுகோள் அவனைப் பணிய வைத்தது. "சரியம்மா, உன் இஷ்டம்!" என்று ஒப்புக் கொண்டான்.

அடுத்த மாதமே ஹரிஹரன் என்னை மணந்தார். அதன் பிறகு அவர் ஒரு கிராமத்தில் இருந்தார். அந்த ஒருமாதமே நான் அவருடன் வாழ்க்கை நடத்தியது.

இதற்காகவே கல்யாணியை உலகத்தில் விட்டு வைத்திருந்ததுபோல் அதற்குச் சில தினங்களுக்குப் பிறகு பகவான் அவளைத் தன்னிடம் அழைத்துக் கொண்டார்.

என் கணவர் விடுமுறை தீர்ந்ததும் சென்னை சென்றார். வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து விட்டார். அதன் பிறகு அவர் வரவே இல்லை. மூன்று மாதகாலம் சென்றது. நான் மூன்று மாதகாலமாக ஸ்நானம் செய்யாமல் இருந்தேன். ஒரு தடவை வந்து விட்டுப் போகும்படி எழுதினேன். பதில் இல்லை. இப்படி ஏழெட்டுக் கடிதங்கள் எழுதியும் பதில் இல்லை. கடைசியில் அவர் எழுதினார். அவளுடன் பிரிந்துப் படித்தேன்.

"சாகப்போகின்ற என் தாயாரின் நிர்ப்பந்தத்தின்பேரில் உன்னைக் கைப் பிடித்தேனே ஒழிய உன்னை மனைவியாக ஆக்கிக் கொள்ளும் ஆசையால் அல்ல. என் தாய்க்கு மனநிம்மதி கொடுக்கவே உன்னை மணந்தேன். அவளே உன்னை நான் மணக்க விரும்பினாள். எனக்கோ அதில் இஷ்டமே இல்லை. இதைச் செய்யாவிட்டால் அவள் மனமுடைந்து இறந்து விடுவாளே என்று

யோசித்தேன். முடிவும் செய்தேன். அவள் மன அமைதியடைய உன்னை மணந்தேன். என்றைய தினம் அவள் இறக்கிறாளோ அன்றே உன்னையும் மறந்து விடுவது என்று தீர்மானித்தே இந்தக் கலியாணத்துக்கு உடன்பட்டேன். என் அதிர்ஷ்டம்தான் அவள் சீக்கிரமே காலமானாள். ஏ, பட்டிக்காடே! உன்னைக் கட்டிக் கொண்டு வாழ் நாள் முழுவதும் கஷ்டப்பட எனக்கு என்ன பைத்தியமா!" என்று எழுதி யிருந்தது.

நாலே மாதங்களில் நான் வாழ்க்கை பிரயாணத்தைத் தொடங்கி முடித்துக் கொண்டேன். ஊரில் இருந்தவர்கள் அவர் பேரில் ஜீவனாம்ச வழக்குப் போடும்படி சொன்னார்கள். எனக்கு அதில் இஷ்டமில்லை. என்னை அவர் வேண்டாத போது அவர் காசு மட்டும் எதற்கு? ஆனால் என் அதிர்ஷ்டம் கலியாணமான ஒரு மாதம்வரை அவருடன் வாழ்க்கை நடத்தினதால் தப்பினேன். இல்லாவிட்டால் நான் கர்ப்பமானதற்கு எனக்கு ஏதாவது பட்டம் கட்டி யிருப்பார்கள். நான் அபவாதத்திலிருந்து தப்பினேன். என் தாயாரும் நானும் கஷ்டப்பட்டு ஜீவனம் நடத்தினோம். எனக்கு ஒரு பையன் பிறந்தான்.

அதன் பிறகு சென்னைக்குப் போனோம். அங்கு தெரிந்தவர்கள் வீட்டில் என் தாயார் வீட்டு வேலை செய்யலானாள். அவளது வருவாயைக் கொண்டு நாங்கள் வயிறு வளர்த்து வந்தோம்.

காலப் பறவை சிறகடித்துக் கொண்டு எட்டு மைல் கல்லைத் தாண்டிக் கொண்டு சென்றது. என் பையன் நன்றாகப் படித்து வந்தான். அப்போது அவனுக்கு எட்டு வயது. நாலாவது படித்துக் கொண்டிருந்தான். அதே சமயத்தில் என் தாயார் இறந்து விட்டாள். எனவே, நான் வேலைசெய்து வயிறு கழுவும்படியாகி விட்டது.

நான் வேலை செய்து கொண்டிருந்தவர்கள் வீட்டில் இருந்த பெரியவருக்கும் பெரியம்மாவுக்கும் குழந்தைகள் இல்லை.

"இதோ பார், எங்களுக்கோ குழந்தை இல்லை. பையனோ கெட்டிக்காரனாயிருக்கிறான். உன்னால் படிக்க வைக்க முடியாது. நாங்கள் பையனை எங்கள் பையன் போல் பாவித்துக் கொள்கிறோம். அவனை உயர்ந்த பதவிக்குக் கொண்டு வருகிறோம். நீ வேண்டுமானால் எங்களுடன் இரு!" என்றார்கள்.

"என் குழந்தைக்கு வரக்கூடிய அதிர்ஷ்டத்தைத் தடுக்க நான் யார்! பையனைப் படிக்க வைத்து அவன் முன்னுக்கு வந்தால் போதும். என் பெயர் சொல்லாமல் எங்கேயாவது தீர்க்காயுசுடன் இருந்தால் போதும்" என்றேன்.

அடுத்த வாரமே காசியைப் பார்க்க க்ஷேத்ராடனம் கிளம்பினேன். கிளம்பும்போது அவர்களிடம், "பையனிடம் என்னைப் பற்றியோ என் கணவனைப் பற்றியோ கூற வேண்டாம். ஏதோ உங்கள் தூரத்து உறவு என்று சொல்லிக் கொள்ளுங்கள்" என்றேன். அதன் பிறகு மன நிம்மதியுடன் நான் காசி யாத்திரைக்குப் புறப்பட்டு விட்டேன்.

அதன் பிறகு பத்து வருடங்களாகிவிட்டன. பிள்ளைப் பாசம் தலை தூக்கியது. ஒரு தடவை போய்ப் பார்த்து வருவோம் என்று கிளம்பினேன். பட்டணத்துக்கு வந்து விசாரித்தால் அவர்கள் எல்லோரும் மாண்டலே சென்று விட்டதாகத் தெரிந்தது. என் நெஞ்சை என்னவோ செய்தது. அதன் பிறகு அவர்களைப் பற்றிய தகவலே இல்லை. கடைசியில் நான் புறப்பட்டு மதுரையிலிருந்த என் சிறிய தாயார் வீடு சென்றேன். அங்கு ஆறு வருடகாலம் இருந்தேன். என் சித்தி தன் கையிலிருந்த ஆயிரம் ரூபாயை என்னிடமே ஒப்



போலீஸ்காரர்:—ஏன் தம்பி, உன் சைக்கிளுக்கு லைசென்ஸ் எங்கே?

சைக்கிள்காரர்:—நான் இப்பொழுது தான் சைக்கிள் விடுவதற்குக் கற்றுக் கொள்ளுகிறேன். இதற்குக் கூட லைசென்ஸ் வேண்டுமா?

படைத்து விட்டு இறந்து விட்டாள். அந்த ரூபாயை எடுத்துக் கொண்டு காவேரிக்கரையிலாவது கொஞ்ச நாள் தங்கி ஸ்நானம் செய்தால் போகிற வழிக்காவது புண்ணியம் என்று நினைத்து இந்த ஊருக்கு வந்தேன். ஆறு வருடமாக காவேரி ஸ்நானம் செய்வது, கோவிலுக்குப் போவது என்று காலம் கழித்து வந்தேன்.

சில மாதங்களாக உடம்பில் ரத்தம் செத்துப் போய் இப்போது படுத்த படுக்கையாக ஆகிவிட்டேன். இப்போது டைபாயிட் ஜுரம் என்று பக்கத்து வீட்டுப் பையன் இங்கு கொண்டு வந்து சேர்த்து விட்டான். 'எனக்கு எதற்கு ஆஸ்பத்திரி? காவிரியாற்றிலே இழுத்து எறி' என்று சொன்னால் அவன் கேட்கவில்லை.

உலகில் யாருக்காக நான் உயிர் வாழணும்! தாலி கட்டிய துணைவன் நாலே மாதத்தில் கைவிட்டான். பெற்ற பிள்ளையையோ நானே உயிரோடு கொடுத்து விட்டேன்.

இவ்வாறு சொல்லி அவள் சோகக் கண்ணீர் உகுத்தாள்.

"ஏன்! உனக்கு உன் பிள்ளையைப் பார்க்கணும் என்கிற ஆசையில்லையா!" என்று கேட்டேன்.

"ஆசையில்லாமல் இருக்குமா! ஆசைப்பட்டு என்ன செய்வது! அவன் எங்கேயோ, நான் எங்கேயோ!" என்றாள் அவள்.

அதற்குள் காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். அங்கே பெரிய டாக்டர் வந்து கொண்டிருந்தார். அவர் என்னைப் பார்த்துக் கோபமாக, "என்ன, டாக்டர்! நோயாளிகளை நீர் பார்த்துக் கொள்ளும் லக்ஷணம் நன்றாயிருக்கிறது. ஒரு நோயாளி அதிலும் இரண்டாவது வாரத்தில் ஜன்னி பிறந்துள்ள டைபாயிட் நோயாளியை மணிக் கணக்காகப் பேசவிட்டு சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறீரே! இப்படித்

தானா நோயாளிகளை நீர் பாதுகாப்பது! வாரும், இப்படி!" என்று தர தர வென்று கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்.

"இல்லை, டாக்டர்! அந்த அம்மாள்தான் என் தாயார். என்னை வளர்த்து வந்தவர்கள் சமீபத்தில் இறந்து விட்டார்கள். அவர்கள் இறக்கும் போது நான் யார் என்பதையும் என் தாயாரைப் பற்றியும் அவள் பட்ட கஷ்டத்தைப் பற்றியும் சொல்லி அவளை நான் எப்படியாவது கண்டு பிடித்து அவள் மனப் புண்ணை ஆற்ற வேண்டும் என்று சொன்னார்கள். அந்த நோயாளி சொன்னவைகளும் என்னை வளர்த்தவர்கள் சொல்லியதும் சரியாயிருக்கிறது. டாக்டர்! அவள்தான் என் தாயார்!" என்றேன்.

"தெரியும், மிஸ்டர்! நானும் இவ்வளவு நாழிகை அந்த அம்மாள் சொன்னதை ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்தேன், உமது முக பாவத்தையும் கவனித்து வந்தேன். நீர்தான் அவள் பிள்ளை என்றும் தெரிந்து கொண்டேன். ஆனால் நீர் திடீரென அந்த அம்மாளிடம் போய் நான்தான் உன் பிள்ளை என்று சொல்லியிருந்தால் அவள் அப்படியே

"டாக்டர் நீங்கள் சொல்வது ரொம்ப சரி. நீங்கள் என் தாயாரை மட்டுமல்லாது என்னையும் காப்பாற்றி விட்டீர்கள். உங்களுக்கு நான் கைம்மாறு செய்வேன்" என்றேன்.

"கைம்மாறு! இந்தப் பஞ்ச மகா பாதகன் அநியாயமாக உங்கள் இருவருக்கும் இழைத்த கொடுமைக்கு எனக்கு ஏழேழு ஜன்மத்துக்கும் விடுதலை கிடையாது" என்றார் டாக்டர். அவர் கண்கள் நீரைத் தாரையாய்ச் சிந்தின.

"அப்படியானால் நீங்கள்......!"

"ஆம். உன் தாயாரின் வாழ்க்கையைக் குலைத்த உன் தகப்பனார் நான்தான்."

"அப்பா!" என்று ஆர்வத்துடன் கட்டிக் கொண்டேன். அதன் பின் நாங்கள் அவளுக்குக் கொடுக்க வேண்டிய மருந்து வகைகளைப் பற்றி விவாதித்து விட்டுச் சற்றுக் கண்ணயர்ந்தோம்.

விடியற்காலம் ஐந்து மணி இருக்கும். நர்ஸ் வந்து அவசர அவசரமாக எழுப்பினாள்.

"பத்தாம் நம்பர் நோயாளி பைசலாகி விட்டாள்" என்றாள். அலறியடித்துக் கொண்டு ஓடி




## 6. கடிதம் வந்தது!

சுதாகர் எங்கே இருக்கிறான்? என்ன செய்து கொண்டிருக்கிறான்? இதையெல்லாம் மனோரமாவுக்கு யார் சொல்லப் போகிறார்கள்? எதற்காகச் சொல்லப் போகிறார்கள்? இதைப் போன்ற தங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் பிறர் எதற்காக அநாவசியமாகச் சித்தத்தைச் செலவிடப் போகிறார்கள்? மனோரமாவின் மனத்தை வேதனைச் சுமை அழுத்தியது. அவளுக்கு இவ்வளவு வருத்தமும் வேதனையும் உண்டாவானேன்? அவளுக்கே அதன் காரணம் சரியாகப் புலனாகவில்லை. மனோரமா அமைதியே உருவான அறிவுள்ள பெண். அவளுடைய உள்ளத்திலேயே அம்மாதிரி மாறுதல் ஏற்பட்டது. அவளுக்கே அதன் காரணமும் விளங்கவில்லை. அதை நினைக்க நினைக்க அவளுக்கே வியப்பாக இருந்தது! சுதாகரோ அவளுக்கு அதிகமாக முன்பின் அறிமுகம் இல்லாத வேற்று வாலிபன். அவனது நினைவு அவளுடைய உள்ளத்தில் அடிக்கடி இடம் பெறுவானேன்? உள்ளத்து உணர்ச்சிகளைக் கிளர்ச்சி கொள்ளச் செய்வானேன்? இது நல்லதற்கா, கெட்டதற்கா?

அடிக்கடி சுதாகரின் நினைவு அவளுடைய உள்ளத்தைக் குடைந்து எடுத்துக் கொண்டிருந்தது. மனோரமா அவனுடன் ஒரே ஒரு நாள்தான் பேசியிருக்கிறாள். அதுவும் சிறிது நேரத்துக்குத்தான் பேசியிருக்கிறாள். பேசின வார்த்தைகளும் எவ்வளவு? எண்ணி இரண்டு ஒன்றுதான். ஆனால் அந்தச் சம்பவம் அவளுடைய கண்களில் அப்படியே அழியாச் சித்திரமாகப் பதிந்து விட்டது. எவ்வளவு முயன்றும் அவளால் அதைத் தன் மனக் கண்களிலிருந்து அகற்ற முடியவில்லை.

சுதாகர் கடிதம் எழுதுவதாக வாக்களித்திருந்தான். அவன், தான் கொடுத்திருந்த வாக்கை நிறைவேற்றுவானா? நிறைவேற்றுவதென்றால் எப்பொழுது நிறைவேற்றுவான்? இதை எண்ணியவாறே உட்கார்ந்திருந்த மனோரமாவுக்கு மயிர்க் கூச்செடுத்தது. கடிதத்தைப் பற்றிக் கற்பனை செய்த மாத்திரத்திலேயே அவளுடைய உள்ளத்தில் உணர்ச்சி ஊற்றெடுத்தது; அவளையும் மீறி ஆனந்த வெள்ளம் பொங்கிக் கரை புரண்டது.

அடுத்த கணம் சுதாகர் கடிதம் எழுதினால் 'என்ன எழுதுவான்?' என்ற கற்பனையில் ஈடுபட்டுவிட்டாள். அவளுடைய இருதயத்தில் சில இன்ப எண்ணங்கள் இடம் பெற்றன. எனவே, முகம் வெட்கத்தினால் குப்பெனச் சிவந்தது. அத்துடன் அவளையும் மீறி நாணம் கலந்த சிரிப்பும் பீறிட்டுக் கொண்டு வந்தது. 'என்ன பைத்தியக்காரத் தனம்! என்னவெல்லாமோ அசட்டுப் பிசட்டென்று கற்பனைக் கனவு காணத் தொடங்கி விட்டேனே!' என்று தன் உள்ளத்து உணர்ச்சிகளுக்கு அணைபோட முயன்றாள் அவள். என்ன முயன்று என்ன? அவள் மனம் அவள் கைக்குள் அடங்கியிருந்தால்தானே? அதுதான் கற்பனைச் சிறகு கட்டிக் கொண்டு எங்கெல்லாமோ பறக்கத் தொடங்கி விட்டதே!

நானும் சுதாகரும்!

அவள் மறுபடியும் சிந்தனையில் ஈடுபட்டு விட்டாள். ஈடுபட்டவள் அப்படியே சிலையாகச் சமைந்தும் விட்டாள்.

அந்த நேரத்தில்தான் கீழேயிருந்து தபால்காரன் குரல் கொடுத்தான். அந்தக் குரலைக் கேட்டுச் சிந்தனை கலைந்த மனோரமா துணுக்குற்றாள். அவளுடைய உள்ளத்தையும் உடலையும் ஒரு தடவை குலுக்கிப் போட்டது. இருந்தாலும் தன்னைச் சமாளித்துக் கொண்டு 'தட தட' வென்று வேகமாகப் படியிறங்கிக் கீழே ஓடினாள். ஓடின வேகத்தில் நாற்காலியில் மோதிக் கொண்டாள். காலில் அடிபட்டது. அந்தச் சமயம் அடிபட்டதோ வலிப்பதோ அவளுக்கு ஒன்றுமே தெரியவில்லை. பிறர் பார்ப்பதற்கு முன்பாகத் தனக்கு வந்த கடிதத்தை வாங்கிக் கொண்டு தனிமையில் போய்ப் படிக்கவேண்டும் என்ற ஆசை அவளை அப்படி மெய்மறக்கச் செய்து விட்டது. காலில் பட்ட அடி கூட அவளுக்குத் தெரியவில்லை. உறைக்கவும் இல்லை.

கீழே இறங்கி வந்தவள் கடிதத்தை வாங்கிக் கொண்டாள். அழகிய எழுத்துக்களில் அவளுடைய பெயர் எழுதப்பட்டிருந்தது. முத்து முத்தாக எழுதப்பட்டிருந்த அந்த எழுத்துக்களைப் பார்த்ததும், இவ்வளவு அழகான எழுத்தில் நமக்கு யார் கடிதம் எழுதியிருக்கப் போகிறார்கள் என்ற எண்ணமே அவளுடலைப் புல்லரிக்கச் செய்தது. ஆனால் கடிதத்தைப் பிரித்துப் பார்க்கும் துணிவு மட்டும் அவளுக்கு எழவில்லை. யாராவது பார்த்து விட்டால்......? அவள் பயந்து அந்தக் கடிதத்தை மடித்துத் தன் ரவிக்கைக்குள் செருகிக் கொண்டாள். அந்தக் கடிதத்துடன் இன்னும் இரண்டு மூன்று கடிதங்களும் வந்

இருந்தன. அவை அவளுடைய தகப்பனாரின் பெயருக்கு வந்திருந்தன. அவற்றை எடுத்துக் கொண்டு அவள் மாடி யேறி வந்து தன் தந்தையின் கையில் கொடுத்தாள்.

"யார் யாருடைய கடிதங்கள்?" என்று கேட்டார் ராமலால்.

"நான் படித்துப் பார்க்கவில்லை. படிக்கட்டுமா?" என்று கேட்டாள் மனோரமா.

அப்பா படிக்க எழுதத் தெரிந்தவராயிருந்தும் என்னை எதற்காகப் படிக்கச் சொல்கிறார் என்ற கேள்வி மனோரமாவின் உள்ளத்தில் எழுந்தது. தினம் மனோரமாதான் அவருக்குக் கடிதம் படித்துச் சொல்வது வழக்கம். ஆனால் இன்று அதை அடியோடு மறந்து விட்டாள். மறக்கத்தான் பெரிய காரணம் இருந்ததே! அவள் பெயருக்குக் கடிதம் வந்திருந்ததே. அந்த ஒரு காரணம் போதாதா? கடிதத்தைப் பிரித்துப் பார்க்காமலே கடிதத்துக்குள் எழுதியிருந்த விஷயத்தைக் கற்பனைக் கண் கொண்டு படிக்கத் தொடங்கி விட்ட அவளுக்கு இந்த உலகத்து நினைவு கொஞ்சமாவது ஏற்பட்டால் அல்லவா?

ஆனால் அவளுடைய தந்தை அதிகநேரம் அவளைக் கற்பனை உலகத்தினுல் சஞ்சரிக்க விடவில்லை. வந்திருந்த கடிதங்களைப் படித்துச் சொல்லுமாறு அவளுக்குக் கட்டளையிட்டார். தந்தையின் அந்த உத்தரவைக் கேட்க அந்தச் சமயம் அவளுக்கு மனம் இல்லை. இருந்தாலும் என்ன செய்வது? என்ன சால்சாப்புச் சொல்லித் தப்பித்துக் கொள்வது? ஒரு வழியும் புலப்படாமற் போகவே, மனம் இல்லாமல் இருந்தும் படிக்க உட்கார்ந்தாள். வந்த தபால்களை ஒன்று விடாமல் தந்தைக்குப் படித்துச் சொல்லித்தான் ஆகவேண்டும் என்பது அவளுக்குத் தெரியாத விஷயம் அல்ல. இருந்தாலும் 'எப்பொழுது முடியுமோ?' என்று மனத்துள் அலுத்துச் சலித்துக்கொண்டே அக் கடிதங்களைப் படித்தாள்.

எப்படியோ ஒரு விதமாகக் கடிதத்தைப் படித்து முடித்துவிட்டுத் தன் அறைக்கு வந்தாள். உட்புறமாகக் கதவை அறைந்து சாத்தித் தாளிட்டுக் கொண்டாள். பொங்கும் உள்ளத்துடன் மார்பகத்தில் மறைத்து வைத்திருந்த கடிதத்தை எடுத்து உறையைக் கிழித்தாள். அவளுடைய இருதயம் படபடத்துக் கொண்டிருந்தது. எனவே மிகவும் ஜாக்கிரதையாக உறையைக் கிழித்தாள். நூறு ரூபாய் நோட்டு ஒன்றும் கடிதம் ஒன்றும் அதில் இருந்தது. ஆச்சரியமும் சந்தேகமும் ஒருங்கே முற்றுகையிட மடித்திருந்த அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தாள்.






மனோரமா !

இன்று என் பிறந்த நாள். எனவே, இந்தச் சிறிய வெகுமதியை உனக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன். இந்த வெகுமதி அனுப்புவதற்கு உன் தந்தையின் அனுமதியை முன் கூட்டியே பெற்று விட்டேன். ஆகவே, எவ்விதத் தயக்கமோ சங்கோசமோ இன்றி இந்த அன்புக் காணிக்கையை ஏற்றுக்கொள். இதைக் கொண்டு உனக்குப் பிடித்த பொருளை என் ஞாபகார்த்தமாக வாங்கிக் கொள். மறந்து விடாதே.

மாதவப் பிரஸாத்.

அதைப் படித்த மனோரமாவுக்கு எட்டு அடுக்கு மாளிகையின் மேல் தளத்திலிருந்து குப்புறங்கரணமாகக் கீழே விழுவதுபோன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவளுடைய உற்சாகம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது. இருதயத்திலே சுரந்திருந்த இன்ப உணர்ச்சி வறண்டு விட்டது. உள்ளத்தின் ஆழத்திலே அலைமோதிக் கொண்டிருந்த ஆனந்தம் அடங்கி விட்டது. உலகமே வெறிச் சோடிவிட்டது போன்ற உணர்ச்சி உள்ளத்தைப் பிழிந்தெடுத்தது. தன்னுடைய வாழ்க்கைப் படகு முன்பின் பழக்கமில்லாத, மனத்துக்குப் பிடிக்காத திசையை நோக்கி முன்னேறிக் கொண்டிருப்பது போன்ற எண்ணம் அவள் இருதயத்தை என்னவோ செய்தது. எத்தனை நேரம் அவள் கண் இமைக்காமல், வாய் திறவாமல், வெறிச் சோடிய சுவரைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாளோ, தெரியாது.

ஜன்னல் வழியே காற்று சீறிக் கொண்டு உள்ளே நுழைந்தது. கீழே கிடந்த கடிதம் அசைந்தது. சூன்யமே உருவான கனவிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, அவள் அந்தக் கடிதத்தையும் நோட்டையும் கையில் எடுத்துக் கொண்டாள். பிறகு அமைதியே உருவாக உட்கார்ந்த வண்ணம் அந்தக் கடிதத்தையும் ரூபாய் நோட்டையும் கிழிக்கலானாள். வேண்டாத குப்பைக் காகிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்தெறிவதுபோல் மனோரமா அந்த இரண்டு காகிதங்களையும் கிழித்துக் கசக்கி எறிந்தாள்.

"இந்த வயதில் பிறந்த நாள் கொண்டாட வெட்கமாயில்லை?"–மனோரமா தன் மனத்துள்ளேயே முணுமுணுத்துக்கொண்டாள். வயது அதிகமாகி விடுவதனால் வாழ்க்கையின் மதிப்புக் குறைந்து விடுவதில்லை என்பது அவள் அறிந்த விஷயம்தான். மாதவப் பிரஸாதுக்கு அப்படி என்ன வயது அதிகமாகி விட்டது? அதுவும் பணக்காரர்களின் வயது குறைவதோ அதிகரிப்பதோ அவர்களுடைய இஷ்டத்தைப் பொறுத்ததாயிற்றே! என்ன? அவர்களுடைய இஷ்டத்தைப் பொறுத்ததா? ஆனால் அவ்விஷயம் அவளுக்குத் தெரியாதே! என்ன செய்வாள், பாவம்! அவள் கீழே போவோம் என்று எண்ணி இறங்கத் தயாரானாள். ஆனால் அவளால் எழுந்திருக்க முடியவில்லை. இருந்த இடத்தை விட்டு எழுந்திராமல் உட்கார்ந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. 'இன்றைக்கு ஏன் இப்படித் தோன்றுகிறது?' என்று தன்னைத் தானே கேள்வி கேட்டுக் கொண்டாள். ஆனால் அவளுக்குத் தன்னுடைய அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லிக் கொள்ளக் கூடத் திராணி இல்லை. உடலும் உள்ளமும் சோர்ந்து தளர்ந்து போவது போன்ற உணர்ச்சி அவளுக்கு உண்டாயிற்று. இருந்தாலும் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுந்து தன் தகப்பனாரிடம் சென்றாள். கொஞ்ச தூரம் போனதும் அவள் காதுகளில் மாதவப் பிரஸாதின் குரல் விழுந்தது. அவள் அடுத்த அடி எடுத்து வைக்காமல் அப்படியே நின்றாள். மேலே போகவேண்டும் என்று அவளுக்குத் தோன்றவில்லை. முகத்திலே வெறுப்பு உணர்ச்சி கோடிட்டது. சில விநாடிகள் அவள் பேசாமல் அப்படியே நின்றாள். பிறகு தன் அறைக்கே திரும்பிப் போய்விடலாம் என்ற எண்ணத்தில் திரும்பினாள். திரும்பினவள் ஒரே பாய்ச்சலில் தன் அறைக்குள் நுழைந்தாள். நுழைந்ததும் முதல் காரியமாகக் கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு தொப்பென்று தன் கட்டிலில் போய் விழுந்தாள். அவள் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டன. அவற்றுக்கு உதவியாக இரு கைகளும் சென்று அழுத்திப் பொத்திக் கொண்டன. அவளுடைய உள்ளம் "சுதாகர், சுதாகர்!" என்று கதறியது.

சுதாகர் எங்கேயிருக்கிறான் என்று அவளுக்கு யார் சொல்லப் போகிறார்கள்?

கீழிருந்து சுபத்திரா குரல் கொடுத்தாள், "மனோரமா! கொஞ்சம் கீழே வா. மாதவப் பிரஸாத் வந்திருக்கிறார்!" என்று.

"எனக்குத் தலையை வலிக்கிறது. நான் இப்பொழுது வர முடியாது!" என்று மனோரமா படுக்கையில் படுத்தவாறே கூறினாள்.




உண்மையில் மாதவப் பிரஸாத் மனோரமாவையே எண்ணிக் கொண்டிருந்தார். தாம் அனுப்பிய கடிதத்தையும் நோட்டையும் பார்த்த மனோரமாவின் மனத்தில் எவ்வித உணர்ச்சி உண்டாகியிருக்கிறது என்பதை அறியவேண்டும் என்ற ஆவல் அவரை உந்தித் தள்ளியது. நல்லவர்கள் என்று சொல்லப் படுபவர்கள் கையாளும் தந்திரங்கள் தீயவர்கள் என்று சொல்லப்படுபவர்களினால் கையாளப்படும் மட்டமான தந்திரங்களைக் காட்டிலும் சிக்கல்கள் வாய்ந்தவை. மாதவப் பிரஸாத் கடிதத்தையும் அனுப்பி விட்டு நேரிலும் வந்ததற்குக் காரணம், மனோரமாவின் மனத்தைப் படித்துப் புரிந்து கொள்வதற்காகத்தான். ஆனால் அவருடைய விருப்பம் ஈடேறவில்லை. அவர் என்ன விரும்பியும் மனோரமா வரவில்லை.

முதல் நாள் லக்ஷ்மி செய்த காரியங்கள் மாதவப் பிரஸாதின் மனத்தில் மறுமணம் செய்து கொண்டுதான் ஆக வேண்டும் என்ற எண்ணத்தை விதைத்துச் சென்றன. மண வாழ்க்கையின்றி மனிதன் நேர்மையானவனாக இருக்க முடியாது என்ற எண்ணமும் அதைத் தொடர்ந்தாற் போலவே அவருடைய உள்ளத்தில் வேரூன்றியது. ஆனால் நாம் தீய ஒழுக்க முள்ளவனாகி விட்டால் என்ன ஆகும் என்ற பயத்தில் செய்து கொள்ளப்படும் விவாகத்தினால் மனிதன் தன் நல்லொழுக்கத்தை எவ்வளவு தூரம் பாதுகாக்க முடியும் என்று அவர் சிந்தித்துப் பார்க்கவில்லை. நாற்புறங்களி லிருந்தும் வழிந்தோடும் காமஇச்சையை ஒன்று கூட்டி ஒருவரிடத்தில் நிலைநிறுத்தும் நோக்கம்தான் திருமணம் என்னும் புனிதப் பெயர் பெற்றதா? தன் ஆசையைத் தணித்துக் கொள்வதற்கு ஒரு சாதனமாக இருப்பவள்தான் மனைவி என்று அழைக்கப் படுகிறாளா? நீதியாம், நேர்மையாம்! நன்னடத்தையாம், நல்லொழுக்கமாம்! அப்பப்பா! உலகத்தில் இதைப்பற்றிச் சொல்லப்படும் விரிவுரையே வெகு வெகு விசித்திரமாக அல்லவா இருக்கிறது!

காலங்கடந்த மனைவி அவர் சிந்தனைகளுக்கு இடையூறாக நின்றாள். அவளுக்கு அவர் அளித்திருந்த வாக்குறுதிகள் எல்லாம் நினைவு வரவே, அவரை வெட்கம் பிடுங்கித் தின்றது. ஆனால் அதை ஒரு புறம் மூட்டை கட்டி வைத்து விட்டு, மறுபடியும் மறு மணத்தைப் பற்றி யோசிக்கலானார்.

என்ன செய்யலாம்! நாம் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்து விடுவோமா? அப்படிக் கல்யாணம் செய்து கொள்ளாமல் நாம் இருந்து கெட்ட வழியில் செல்ல நேர்ந்தால், அது மனைவிக்கு நாம் கொடுத்த வாக்குறுதியை மீறுவதாக முடியாதா? அவளை அவமதிப்பதாக ஆகாதா? அவளுக்கு அநீதி இழைப்பதாக ஆகாதா?

இம்மாதிரி தர்க்கத்தில் அவர் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்ள முயற்றார்.

கெட்ட வழியில் செல்வதைக் காட்டிலும் மறுமணம் செய்து கொள்வது எவ்வளவோ சிறந்தது என்று தோன்றியது அவருக்கு. அவருக்கு மட்டும் என்ன? உலகத்துக்கேகூட இப்படித்தானே தோன்றுகிறது! எல்லோரும்தான் மறு மணம் செய்து கொள்கிறார்கள்! மாதவப் பிரஸாதைமட்டும் இவ் விஷயத்தில் குற்றங் கூறுவானேன்? அவரும் இந்த உலகத்தின் ஒரு அம்சம்தானே?

அதுமட்டும் அல்ல; அவர் எவ்வளவு வாக்குறுதி அளித்திருந்த பொழுதிலும் அவருடைய மனைவி சாகும் பொழுதுகூட மறு மணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்திக் கூறிவிட்டுத்தான் கண்களை மூடினாள். அவளுடைய வற்புறுத்தலை, கட்டளையை மாதவப் பிரஸாத் எப்படி மீறுவார். பாவம்! காலஞ்சென்ற மனைவியின் வேண்டுகோளுக்கும் வற்புறுத்தலுக்கும் எதிராக அவர் வீணில் ஏன் பாவமூட்டையைச் சுமக்க வேண்டும்?

இப்படி எண்ணங்களுக்கு மேல் எண்ணங்கள் முற்றுகையிடவே, மாதவப் பிரஸாத், "நாம் மறுபடியும் மணம் செய்து கொண்டுதான் ஆகவேண்டும்!" என்ற தீர்மானமான முடிவுக்கு வந்தார். (தொடரும்)

★ ★ ★

# காஸ்டோபின்

REGD.



பரிபூர்ண
சுகத்திற்கு



ஒரு பாக்கட்டுக்கு

**ருசிகரமான சாக்கலேட் லாக்ஸடிவ்**

100, 50, 25 சென்ட பாட்டில்களிலும் கிடைக்கும்
CASTOPHENE MFG. COMPANY, BOMBAY-18

---

## புண்படுத்தும் உஷ்ணத்தின் தொல்லையையொழிக்க






கால்கேட் பிரிக்லி ஹீட் பவுடரை உபயோகியுங்கள் அதில் சேர்ந்துள்ள அற்புதமான சக்தி வாய்ந்த ஒரு பொருள்

1. புண்படுத்தும் உஷ்ணத்தால் அரிச்சல் ஏற்படாமல் தடுக்கிறது; ஏற்பட்டாலும் உடனே குணம் படுத்துகிறது
2. சருமத்திற்கு இதமும் குளிர்ச்சியும் அளிக்கிறது
3. குழந்தைகள், பேபிகளுக்குக்கூட பத்திரமானது. பயன் தருவது!

# கால்கேட்

பிரிக்லி ஹீட் பவுடர்

இன்றே ஒரு டப்பா வாங்கி நாளையே இதம் பெறுக!

---

3 வாசனைக் கலாரத்னங்கள்

# கம் கம் ஜவாஜ் ★ கம்பால் ★ கமகர்

அகர்பத்திகள்

டி. எஸ். சுகந்தாலயா,
வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 58. வஜ்ராசனம்

"தோளை வலியுடைய தாக்கி—உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி—அரி
வாளைக்கொண்டு பிளந்தாலும்—கட்டு
மாறு வுடலுறுதி தந்து………"

என்று கவியரசர் பாரதியார் கேட்கிறார்.

உண்மையில் அச்சக்தி இந்த வஜ்ராசனத்தைச் செய்தால் உண்டாகும். வஜ்ரம், வைரம் என்ற சொற்கள் உறுதியைக் காட்டுகின்றன. அம்மாதிரி உறுதி இந்த ஆசனம் பயில்பவர்களுக்கு ஏற்படுகின்றது. "அது எப்படி ஏற்படும்! மரத்தைப் பிளக்கும் அரிவாளைக் கொண்டு இந்த மானிட உடலைப் பிளந்தால், உடல் தாங்குமா! உடல் என்ன மரத்தைவிடக் கடினமானதா!" என்று கேட்கலாம்.

நமது பண்டைய வீரர்களெல்லாம் அநேக யுத்த களங்களில் சண்டை செய்து பல இரண காயங்களைச் சுமந்து அவைகளையே வீரத்தின் சின்னங்களாகக் கொண்டு பெருமைப்படவில்லையா! வலது கை போனால்தான் என்ன! இடது கையால் வாளெடுத்து எதிரிகளை வெட்டி வீழ்த்தவில்லையா! கால்கள் அறுபட்டுப் போயின. அப்பொழுதும் மற்றவர் சுமக்க எதிரிகளைக் கொன்று வீழ்த்தவில்லையா! இவைகளெல்லாம் வஜ்ரம் போன்ற, வைரம் பாய்ந்த வீரர்களால்தான் செய்ய முடியும். இம்மாதிரி வீர சாகசங்கள் அஞ்சா நெஞ்சம், உறுதி, துணிவு முதலியனவெல்லாம் தோளை வலியுடைய தாக்கியும், உடலின் சோர்வையும், பிணி பலவும் போக்கிக் கொண்டவர்களுக்குத் தான் உண்டாகும். அப்பேர்ப்பட்டவர்கள் அரிவாள் மட்டும் என்ன! அணுகுண்டைக் கண்டாலும் அஞ்ச மாட்டார்கள். வீரம், பலசாலிகளிடம், கட்டுமாறு உடலுறுதி படைத்தவர்களிடம்தான் பிறக்குமே தவிர, பலமற்ற நோய்களுற்ற, சோர்வுற்ற, சோம்பல் குணம் படைத்த கோழை நெஞ்சர்களிடம் பிறக்காது.

அப்படி வீரம், பலம், உறுதி, வைரம் பாய்ந்த உடல், உண்டு, உறங்கி நாளைக் கடத்துபவர்களுக்கு உண்டாகாது. கடவு காலத்தில் வயல்களை உழாமல், விதைக்காமல், அறுவடைக் காலத்தில் அரிவாளைக் கொண்டு சென்றால், தானியம் கிடைக்குமா! அதைப் போலத்தான் உடலும். உடலைப் பல முயற்சிகளால் பலமாதிரி பயிற்சிகளால் கஷ்டப்பட்டு உழைத்து உரமேற்றி வைத்துக் கொண்டால் கட்டுமாறு உடலுறுதி கிடைக்கும்.



அம்மாதிரி உடலை உறுதியாக்குவதற்குப் பலவித தேகப் பயிற்சிகள் இருக்கின்றன. ஆனால், யோகாசனங்கள் அவைகளுக்கு அடிப்படை அஸ்திவாரமாக அமைந்திருக்கின்றன. அதன் மேல் கட்டப்படும் மற்ற பயிற்சிகள் உறுதியான கட்டிடத்தை எழுப்புவதற்கு ஒப்பாகும். அந்த யோகாசனங்களிலும், வஜ்ராசனத்தில் மிக சூட்சுமமாக அமைத்திருக்கின்றனர். இந்த இரகஸ்யத்தை நமது யோகிகள்தான் அறிவார்கள். முதலில் இதைச் செய்யும் விதமறிந்தால், பிறகு இந்த ஆசனம் எப்படி அவ்வளவு விசேஷமானது என்று சொன்னால் விளங்கும்.

**வஜ்ராசனம் செய்யும் விதம்** :—விரிப்பின் மேல் முழங்கால்களை மடித்து மண்டியிட்டு உட்காரவும். குதிக்கால்களைச் சற்று விரித்துப் புட்டங்களை அதன் மேல் வைத்து உட்காரவும். சிறிது சிறிதாக உடல் பளுவைப் பாதங்களின் மேல் போட்டு உட்காரவும். புட்டங்களைத் தரையில் பட வைக்கவும். முழங்கால்கள் சேர்ந்து இருக்க வேண்டும். முதுகை நேராய் நிமிர்த்தி முகத்தை நேராய் வைத்துக் கொண்டு கண்களை மூடி முழங்கால்களுக்கு மேல் இரண்டு கைகளைச் சித்திரத்தில் உள்ளபடி வைத்துக் கொள்ளவும். முழங்காலிலிருந்து பாத விரல்கள்வரை நன்கு தரையில் ஒட்டியிருக்க வேண்டும். இது மிகவும் அவசியம்.

இவ்வாறு ஆரம்பத்தில் சிலருக்குச் செய்ய வராது. அப்படிப்பட்டவர்கள் ஆரம்பத்தில் புருஷ்ட பாகம் தரையில் படாமல் குதிக்கால்கள் மேலேயே சரீரப் பளுவை அழுத்திச் செய்யலாம். சில நாட்கள் இவ்வாறு செய்தால் கணுக்கால் நரம்புகள், பாத நரம்புகள், தொடை நரம்புகள் யாவும் சற்று பிடிப்பு விட்டு முதலில் சொன்னபடி சௌகர்யமாகச் செய்ய வரும்.

மற்றொரு விதமாகவும் ஆரம்ப சாதகர்கள் செய்யலாம். கால்களின் விரல்களை ஒன்றின்மேல் ஒன்று வைத்து அதன்மேல் புருஷ்டங்களைத் தரையில்பட உட்காருவதுதான் கஷ்டம். இது வர, சில நாட்கள் சில மாதங்கள்கூட ஆகலாம்.

ஆரம்பத்தில் விரல்கள், பாதம், கணுக்கால், முழங்கால் முதலியன மிகவும் வலிக்கும். கால்களைச் சரியாய்த் தரையில் ஒட்டி வைக்க முடியாது. இவைகளெல்லாம் பழகப் பழகத்தான் மறையும். முதன் முதலில் ஒரு சில விநாடிகள் தான் இந்த ஆசனத்தில் இருக்க முடியும். இவ்வாறு பல தடவை முயற்சி செய்து வந்தால் ஒரே தடவையில் அரை மணி நேரத்துக்கு மேல் கூட இவ்வாசனத்தில் உட்கார முடியும்.

பலன் :—தேகத்தை வஜ்ரத்தைப் போல் ஆகும்.



பெரியவர் :—வா, அப்பா கிட்டு! உனக்கு மெடிகல் காலேஜில் இடம் கிடைத்துவிட்டது என்று கேள்விப்பட்டேன். சந்தோஷம்!

கிட்டு :—அங்கே எனக்கு இடம் கிடைக்க வில்லை, மாமா! ஒரு உத்தியோகம் கிடைத் திருக்கிறது!

---

மனத்தையும் திடமுள்ள தாக்கும். பாதங்கள், கணுக்கால்கள், முழங்கால்கள், தொடைகள், இடுப்பு முதலியன பலம் பெறும். அவ்விடங்களிலுள்ள வலிகள் விலகும். தூர் நீர் கோத்துக் கொள்ள விடாது. யானைக்கால் வராது; வந்தால் விலகும். அஜீரணம் மாயமாய் மறையும்.

**குறிப்பு :**—வயிற்றில் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் ஆசன நிபுணர்களின் ஆலோசனையின் பேரில்தான் இந்த ஆசனத்தைச் செய்ய வேண்டும். ஸ்திரீகள் கர்ப்பமா யிருக்கும்போது செய்யக் கூடாது. வழக்கமாய்ச் செய்யும் சகோதரிகள் கர்ப்பங் கொண்டால் மூன்று மாதங்கள் வரைதான் செய்யலாம். .

**வஜ்ராசனத்தின் மகிமை :**—உலகத்திலுள்ள சகல ஜீவராசிகளையும் சிருஷ்டிப்பவர் பிரம்ம தேவராவர். அவருடைய இருப்பிடம் தாமரைக் கமலம். அந்தத் தாமரைக் கமலமானது பாற் கடலில் பள்ளி கொண்டிருக்கும் விஷ்ணுவின் நாபிக் கமலத்திலிருந்து—தொப்புளி லிருந்து வளர்ந்து வந்திருக்கின்றது. இதை நமது புராண இதிகாசங்களில் படித்திருக்கிறோம்; கேட்டு மிருக்கின்றோம். படங்களிலும் இவ்வாறு இருப்பதைப் பார்த்து மிருக்கின்றோம்.

மேற்படி விஷயத்தைப் படிக்கும்போதும், பார்க்கும்போதும் முன்பெல்லாம் எனக்கு ஒன்றும் புரியாது. ஒரு முடிவிற்கு வர முடியாமல் திகைப்பேன். ஒரு வேளை பால்கூட சரிவரக் கிடைக்காமல் இருக்கும் இந்த நாட்களில் விஷ்ணு பாற்கடலிலேயே மிதக்கிறாரே! தவிர பெண்கள் தானே தன்போன்ற உயிரைத் தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்ற முடியும்! இந்த விஷ்ணு என்னவென்றால், வயிற்றுக்குள் வைத்துக் கொள்ளா விட்டாலும் அதிலிருந்து ஒரு நாபிக் கொடி வளர்த்து, அதில் தாமரை மலர் வைத்து அந்த மலரில் நான்முகப் பிரம்மாவை உட்கார வைத்திருக்கின்றாரே! நான்கு முகங்கள் கொண்ட அவ்வளவு பெரிய பிரம்மாவே உட்காரும்போது அந்தத் தாமரை மலர் எவ்வளவு பெரியதா யிருக்க வேண்டும். இப்பொழுது ஆஸ்திரேலியாவில் பெரிய பெரிய தாமரை இலைகள் இருக்கின்றன. அதில் ஒரு குழந்தையைக்கூட உட்கார வைக்கலாம். அதைப் போலல்லவா இருக்கின்றது. மற்றும் இம்மாதிரி இதைச் சார்ந்த விஷயங்களைப் பற்றியெல்லாம் என் மனோரதத்திலேற்றிச் சஞ்சாரம் செய்து பார்த்துக் கடைசியில் ஒரு முடிவிற்கும் வராமல் குழப்பத்தில் முடிப்பேன்.

வீட்டில் இருக்கும் பாட்டிகளை நான் சிறுவனாய் இருக்கும்போது கேட்டால் அவர்களிடமிருந்து சரியான பதில் வராது. "அது அப்படித்தான். பெரியவர்கள் ஏற்படுத்தியது. உனக்கு இதைப் பற்றியெல்லாம் கவலையேன்!" என்று சொல்லுவார்கள். கடைசியாய் அதிகப் பிரசங்கி என்ற பெயரைக் கட்டிக் கொள்வேன். முதலில் அவர்களுக்குத் தெரிந்தால் தானே!

ஆனால் இப்பொழுது இந்த ஆசனங்களைப் பற்றிப் பல புத்தகங்களை ஆராய்ந்து படிக்கும்போது தான் இதன் உண்மை விளங்குகின்றது. ஆதி முதல் சிருஷ்டி இரகஸ்யங்களைப் பற்றி ஆராயும் போது பல உண்மைகள் தெரிய வருகின்றன. தாயின் பாலைச் சாப்பிட்டு வரும் வர்க்கங்களெல்லாம், பெண் இனம் கர்ப்பந் தரித்து குட்டி ஈனுகின்றது. அக் குட்டிக்குத் தொப்புளிலிருந்து ஒரு கொடி போன்று இருக்கும். அக் கொடியின் வழியாகத்தான் அந்த ஜீவனுக்கு வயிற்றில் இருக்கும்போது அது வளர்வதற்கு வேண்டிய சகலமும் சென்று கொண்டிருந்தன. வெளி உலகில் வந்ததும், சில நாட்களில் அக் கொடி உலர்ந்து தனித்து விழுந்து விடுகின்றது. வெளி உலகில் வந்த பின் தான் வெளிக் காற்று சுவாசிக்க மூக்கின் வழியை உபயோகிக்கின்றது. பிறகு குளிர் காற்று உடம்பில் பட அழுகின்றது. சத்தமும் பிறக்கின்றது.

இவ்வளவும் வெளியில் வந்த பின்தான். வயிற்றில் இருக்கும்வரை நாபிக் கொடியின் மூலம் தான் அந்த ஜீவன் வளர்ந்தது என்றாலும், வெளி உலகில் வந்தவுடன் அவ்வழி அவசியமில்லாமல் போய்விடுகின்றது. ஆனாலும் சரீரத்தினுடைய சகல நாடிகளுக்கும் ஆதி பிறப்பிடமான இந்த நாபிக் கமலத்தின் சூட்சமங்களை யோகிகள் வெகு சூட்சமமாய்க் கண்டு பிடித்திருக்கின்றனர். இந்த இடம் 72000 நாடிகளின் பிறப்பிடமாகும் என்று யோக சாஸ்திரம் விளம்புகின்றது.

அந்த நாபி ஸ்தானத்தின் உன்னதத்தைக் காட்டவே, விஷ்ணுவின் வயிற்றில் நாபிக் கொடி வைத்திருக்கிறார்கள். குழந்தைக்கு எவ்வாறு அதன் மூலமாய் சகலமும் கிடைத்து வளர்கின்றதோ அதைப் போல உலகத்தையே சிருஷ்டிக்கும் தொழில் அதிபர் பிரம்மா அதில் வீற்றிருப்பதாகவும், அக் கொடியின் உரிமையாளர் மகா விஷ்ணு தனது நாபியின் மூலம் சகல உலக சிருஷ்டிக்கும் ஆதாரமாய் இருக்கின்றார். இதில் ஆச்சரியமென்ன! எல்லாம் கற்பனையின் சிருஷ்டிதானே!

எனவே, நமது யோகிகள் நாபி ஸ்தானத்தை மிக உன்னதமாகக் கொண்டு அதற்குத் தக்க பல பயிற்சிகளைக் கண்டு பிடித்திருக்கின்றனர். அவைகளில் ஒன்று இவ்வஜ்ராசனம். இந்த வஜ்ராசனத்தில் உட்கார்ந்தால், சகல நாடிகளும் சுகப்படும். வயிற்று சம்பந்தமான சகல ரோகங்களும் விலகும். நல்ல பசி உண்டாகும். அஜீரணம் ஒழியும்.



புத்துணர்வூட்டும் புதுமை
மகிழ்வளிக்கும்
மணம்

TSR

- சந்தனாதித் தைலம்
- அரைக்கீரை விதைத் தைலம்
- பிருங்காமலக தைலம்
- கோகுல் கூந்தல் தைலம்

தேவைக்கு ஏற்ப வாங்க வசதியான
ரகவாரி "பாக்கிங்"களில் கிடைக்கும்.






டி. எஸ். ஆர். & கோ.,
வாசனைத் திரவியங்கள் தயாரிப்பாளர்கள்
கும்பகோணம் (S. India)

சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸீஸ், 37, ஜானி ஜான்கான் ரோடு, திருவல்லிக்கேணி, மதராஸ். கோயமுத்தூர், பாலக்காடு, சிலோனுக்கு, சேலம் ஏஜண்டுகள்: B. பாலபட்டாபி செட்டியார், (1933-ல் ஸ்தாபிக்கப்பட்டது). கோயமுத்தூர். பம்பாய்க்கு ஏஜண்டுகள்: சர்மயா ஸ்டோர்ஸ், மாதுங்கா (G. I. P.)

---

# போனோமின்ட்
## பேதியாகும் ச்யூயிங் கம்




போனோமின்ட் அதன் சுத்திகரண வேலையைச் செம்மையாக, ஆனால் மெதுவாகச் செய்கிறது. எரிச்சல் கொடுக்காது. குடலை நோவச் செய்யாது. குழந்தைகள், பெரியவர்கள் யாவருக்குமே சிபார்சு செய்யப்படுகின்றது.

**2, 6, 16 வில்லைகள் கொண்ட பாக்கெட்டுகளில் கிடைக்கும்**

ஏஜெண்டுகள்:

**ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜென்ஸி, 99-ஏ, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1**

WL. 7

# க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ்—

## 2 வழிகளில்* வேலைசெய்கிறது!






க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் அரை யங்குல அளவு எடுத்து பிரஷினால் பல் துலக்குங்கள் . . . க்ஷணத்தில் அதன் அற்புத நுரை வேலை செய்வதை உணருவீர்கள் . . . சுத்தம் செய்கிறது, புது மணம் ஊட்டுகிறது, இயற்கைப் பச்சை க்ளோரோபில்லை வாயினுள் ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும்—உங்கள் பிரஷ் நுழையமுடியாத இடங்களுக்குக் கூட—எடுத்துச் செல்கிறது. ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் ஊடுருவும் நுரை—இரண்டின் நற்பயனையும் அடையுங்கள்! க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் ஒரு டியூப் வாங்குங்கள்—இருவகை செயல் திறனுள்ள பற்பசை அது. ஒரு முறை உபயோகித்தால், எப்பொழுதும் அதைத்தான் உபயோகிக்கத் தோன்றும்!

இரண்டு வழிகளில் சிக்கனம்கூட!

**1**



**2**



# தமிழ்க் களஞ்சியம்

டி.கே.சி

## 33. பேசுகிறவர்களில் பல ரகம்!

சிலர் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசினால் விஷயம் நன்றாய்த் தெரிந்தவர்களுக்கு அது விளங்கும். மற்றவர்களுக்கு விளங்காது.

வேறு சிலர் என்னத்தை எல்லாமோ அளப்பார்கள். 'அடடா, என்ன பேச்சு!' என்று பாமரர்கள் காது கொடுத்து வியந்து கொண்டிருப்பார்கள். ஆனால் அறிவாளிகளால் அதைச் சகிக்கவே முடியாது. இந்த இரண்டும் சாமான்யம். ஒரு ரகத்தைச் சேர்ந்தவைதான்.

ஆனால் வேறு ஒரு வகைப் பேச்சாளர்கள் இருக்கிறார்கள். அப்படிப் பேசக் கூடிய வன்மை உள்ளவர்கள் வெகு சொற்பம். ஒரு உதாரணம்.

சுமார் அறுபது வருஷங்களுக்கு முன் இங்கிலாந்தில் ஆசிரியர் டின்டால் என்ற ஜடதத்துவ நிபுணர் இருந்தார். மகா மேதாவி. உலகப் பிரசித்தி பெற்றவர். எந்த விஷயத்தைப் பேசினாலும் அபூர்வமான உண்மைகள் வெளிவரும். அதோடு ரஸமாகவும் இருக்கும்.

ஆசிரியர் டின்டாலைப் பற்றி அமெரிக்கர்கள் கேள்விப் பட்டார்கள். அமெரிக்கா வரைக்குமே அவர் புகழ் பரவியிருந்தது. அமெரிக்கர்கள் ஆசிரியரை அழைத்தார்கள். ஆசிரியரும் போனார். சயன்ஸ் சம்பந்தமான பிரசங்கங்கள் செய்தார். விஷயத்துக்கான தட்டு முட்டுகளுடன் விஷயத்தைப் பற்றிப் பேசுவார். இருநூறு முந்நூறு மைல் தூரத்திலிருந்து நிபுணர்கள் ஆசிரியர் டின்டாலைக் கேட்க வருவார்கள். அவர்களோடு செல்வவந்தர்களும் சீமாட்டிகளும் வந்து கேட்பார்கள். (இவர்கள் நிபுணர்கள் அல்ல.)

பிரசங்கத்தை மேலே சொன்ன செல்வவந்தர்களும் சீமாட்டிகளும் நன்றாய் உணர்ந்து அனுபவிப்பார்கள். பிரசங்கம் முடிந்த உடன் "ஏன் முடித்துவிட்டார்? இன்னும் பேசலாமே!" என்று தான் தங்களுக்குள் பேசிக் கொள்ளுவார்கள். செல்வவந்தர்கள் சீமாட்டிகள் காரியம் இப்படி. ஆனால், சயன்ஸ் நிபுணர்களுடைய காரியம் வேறு. விஷயம் அப்படியே பற்றிக் கொள்ளும் அவர்களுடைய மனசை. காணுததைக் கண்ட காட்சியாய் இருக்கும் அவர்களுக்கு. ஊருக்குத் திரும்பிப் போனாலும் அவர்களை விடாது பேச்சு. ஆயுள் நாள் முழுதுமே விடாதுதான்.

குறளாசிரியர் காலத்தில் கல்வித் துறையில் நிபுணர்களாய் உள்ளவர்களைக் "கேள்வி உடையார்" "கேட்டார்" என்று சொல்லுவது வழக்கம். அப்படிப் பயிற்சி இல்லாதவர்களைக் "கேள்வி இல்லாதவர்கள்" "கேளார்" என்றும் சொல்லுவது வழக்கம்.

கேள்வி என்றாலே ஆராய்ச்சியின் பயனான நிபுணத்துவம். இப்போது குறளைப் பார்க்கலாம்:

> **கேட்டார்ப் பிணிக்குந்**
> **தகைவாய்க், கேளாரும்**
> **வேட்ப மொழிவதாஞ்**
> **சொல்.**

[கேட்டார் பிணிக்குந் தகையவாய்: நிபுணர்களை அப்படியே பற்றிக் கொள்ளும் தன்மை உடையதாய்; மேலும்—கேளாரும் வேட்ப: நிபுணர்கள் அல்லாத சாமானிய மக்களும் ஆசை கொள்ளும்படியாக; மொழிவதாம் சொல்: பேசுவதுதான் பேச்சு.]

பேச்சுக்கு லக்ஷ்யம் இன்றைக்கும் அப்படித்தான் இருக்கிறது. குறளாசிரியர் காலத்திலும் வித்தியாசம் இல்லை.

○ ★ ○ ○ ★ ○ ○ ★ ○



இரண்டு பேர் போட்டி போட்டார்கள்—யார் பெரிய பொய் சொல்லக் கூடியவர்கள் என்பதாக.

மூன்றாவது நபர் ஒருவரை நீதிபதியாக வைத்துக் கொண்டார்கள்.

முதல் ஆசாமி ஆரம்பித்தான்: "ஆயிரம் அடி நீளமுள்ள பாம்பு வந்து என்னைச் சுற்றிக் கட்டிக்கொண்டு கடித்து விட்டது. இருந்தாலும் நான் பிழைத்து விட்டேன்."

இரண்டாவது ஆசாமி ஒருகணம் யோசித்தான். பிறகு சொன்னான்: "நீ சொல்வது அத்தனையும் உண்மையென்று நம்புகிறேன்."

இரண்டாவது ஆசாமிதான் பெரிய பொய்யன் என்று நீதிபதியாக விளங்கிய மூன்றாவது ஆசாமி தீர்ப்பளித்தான்.

# வாசு சிரித்தான்!

தில்லைவாசி

டாண்! டாண்! டாண்! என்று கடிகாரம் ஒன்பது முறை மணி யடித்து ஓய்ந்தது.

பாலச்சந்திரன் அப்பொழுது கூட எழுந்திருக்க மனமின்றிச் சிலைபோலத் தன் அறையிலேயே உட்கார்ந்திருந்தான். அவன் கவனம் வேறு எங்கோ போய்ப் பதிந்திருந்தது. மனம் எதை எதையோ நினைத்து, நினைத்துக் குழம்பிக் கொண்டிருந்தது.

“வெந்நீர் ஆறிப்போகிறது! ஏன் வீணாக இப்படி உட்கார்ந்திருக்கிறீர்கள்! மணியாகவில்லையா! காரியாலயத்துக்குப் போகவேண்டாமா!” என்று கணவனின் சுக துக்கங்களில் பங்கு கொண்ட சாந்தா அவனுடைய அன்றாட அலுவல்களை ஞாபகப்படுத்தி விட்டாள்.

அப்பொழுது கூடப் பாலச்சந்திரனுக்கு அங்கிருந்து எழுந்துவர மனமில்லை. மனதில் ஏறிப் போயிருந்த கசப்பு, அவனை அழுத்திப் பிடித்துக் கொண்டு, எதிலும் அக்கறையும், ஆர்வமும் கொள்ளாதபடி செய்திருந்தது.

“என்ன நான் சொல்கிறது காதில் விழவில்லையா! இப்படியே இருந்து விட்டால் என்ன ஆகிறது! எழுந்து வாருங்கள்!” என்று சாந்தா மறுமுறையும் கூறிய பின்தான், அவன் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்தான். அதுவும் ஏதோ ஒரு வேண்டா வெறுப்புக்கு, உற்சாகமின்றிச் செய்வது போலத்தானிருந்தது.

சென்ற ஆறுமாத காலமாகவே பாலச் சந்திரன் அப்படித்தா னிருந்தான். மகிழ்ச்சி நிறைந்திருந்த அவன் முகம் கூம்பிய குமுதமாகி யிருந்தது. அவன் வாய் நிறைந்து, அகமகிழ்ந்து, சிரித்து வெகு நாட்களாகியிருந்தன. பொங்கும் பூரிப்புடன், அவன் மனைவி மக்களிடம் காட்டிய அந்த வற்றாத அன்பு இன்று எங்கோ மறைந்து போயிருந்தது. அவன் அதிகம் பேசுவதில்லை. கேட்பதற்கு மட்டும், பதில் கொடுக்க வேண்டிய அவசியத்தை முன்னிட்டு, ஒன்றிரண்டு வார்த்தைகளைத்தான் பேசினான். செய்ய வேண்டியதைக் கனவுலகில் செய்வது போலவே செய்து வந்தான். தொல்லை நீங்காத, இந்த உலகையும், எல்லையில்லாத அதன் போகம் தரும் வாழ்வினையும், குடும்ப வாழ்க்கையையும் துச்சமென வெறுத்த நிலைக்கு வந்திருந்தான்.

மங்காத மகிழ்ச்சியும், குன்றாத இன்பமும் கொண்டு தாம்பத்திய வாழ்வில் சோர்விலாத ஆர்வம் காட்டி, பெருமையோடு வாழ்ந்த அந்த நாளெல்லாம் அவனைப் பொறுத்தவரையில், மறக்கப்பட்ட பழங்கதையாகி விட்டது.

இருண்ட எதிர் காலத்தினை ஊடுருவிப் பார்க்கும் சக்தியைச் சிறிதேனும் கொண்டிராத மனிதக் கூட்டத்தில் ஒருவனாகிய அவன், “இன்று போல் என்றுமே, ஒளி பொருந்திய வாழ்வினையுடையவனாக இருந்து விடுவோம்” என்று எண்ணியிருந்த போதுதான், திடீரென்று எதிர்பாராத விதமாக ஏற்பட்ட அந்த அதிர்ச்சியைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றல் அற்றவனாகி விட்டான். ஆம், அவன் மன நிலையை, அது விளைவித்த வேதனையை, அவனுள்ளே அணு அணுவாய்க் கொடுத்த தொல்லைகளை, அவனைப் போன்ற அனுபவ முடையவர்கள் தாம் எளிதில் உணர்ந்து கொள்ள முடியும்.

அந்தச் சம்பவம் நிகழ்வதற்கு முன்பு பாலச் சந்திரன் காரியாலயத்திலிருந்து மாலை ஐந்து மணிக்குத் திரும்பி விடுவான். தன் மூன்று வயது மகன் வாசுவுடனும், ஏழு வயதுப் பெண் விமலாவுடனும், கொஞ்சி மகிழ்ந்து, விளையாடுவான். பலப் பல வேடிக்கைக் கதைகள் சொல்லி அவர்களை மகிழ வைப்பான். விமலாவைப் பாடச் சொல்லி, ஆடச் செய்து, கண் குளிரப் பார்த்துப் பார்த்து மகிழ்வான். வாசுவின் மழலைமொழியும், கள்ளங் கபடமற்ற சிரிப்பும், குறும்புத்தனமும் அவனை இன்பபுரிக்கே கொண்டு போய் விடும். மக்கட் செல்வத்தின் மாண்பினை முழுக்க முழுக்க அனுபவித்த அவன் “எல்லாம் இன்ப மயம்” என்று வாய்விட்டுப் பாடாத குறையொன்றுதான்.

இத்துடன் அவன் நின்றுவிடவில்லை.

“சாந்தா! சாந்தா!” என்று தன் மனைவியை வளைய வளையச் சுற்றி வருவான். அவளுக்கு வீட்டு வேலைகளில் ஒத்தாசையாக இருப்பான். தன் காரியாலயத்தில் நிகழும் நிகழ்ச்சிகளை, ஒன்றுகூட விடாமல், நடந்தது நடந்தபடியே, கதைபோலச் சொல்லி, நாடகம் போல நடித்துக் காட்டி, அவளை விலாப்புடைக்க, விழுந்து விழுந்து சிரிக்கும்படி செய்து விடுவான்.

“சாந்தா! இன்று நல்ல சினிமாப் படம் வந்திருக்கிறது. போய்ப் பார்த்து விட்டு வருவோம், வாருங்கள்” என்று அவளை அழைப்பான். அவனுடைய கரை காணாத உற்சாகத்தைக் கண்டு அவள் அயர்ந்து வியந்து போய்விடுவாள். அவள் “இன்றைக்கு வேண்டாம், இன்னொரு நாளைக் காகட்டும்” என்று கொஞ்சினாலும் அவன் கேட்க மாட்டான். அவளை வலுக்கட்டாயமாக அழைத்துக்கொண்டு போய்ச் சினிமா பார்க்க வைத்து விட்டுத் தான் மறு வேலை பார்ப்பான்.

ஒரு நாள் பக்கத்து வீட்டில் ரேடியோ பாடுவதைக் கேட்டு, ரசித்த வாசு “அப்பா அங்கே ரேடியோ பாடுகிறதே! ஏன் நம் வீட்டில் மட்டும் இல்லை!” என்று தட்டுத் தடுமாறி மழலை மொழியில் கனிவுடன் கேட்கப் போக, மறுநாளே அவன் வாசுவுக்கென்று ரேடியோ வாங்கி விட்டான். விமலாவும் வாசுவும் ரேடியோ தங்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்த பெருமை பிடிபடாமல், துள்ளிக் குதித்து விளையாடினார்கள். தாங்களும் ரேடியோப் பாட்டோடு சேர்ந்து இனிமையாகப் பாடி மகிழ்ந்தார்கள். மக்களின் இந்த எக்களிப்பில் கலந்து கொண்டு பூரித்துப் போனார்கள் அந்த உற்சாக மான பெற்றோர்கள்.

மனைவி மக்களின் அன்புப் பிணைப்பில் பிணைந்து கிடந்த பாலச்சந்திரன், வாசுவிடம் கொண்டிருந்த அன்பின் மாற்று மட்டும் சற்றே அதிகரித்துக் காணப்பட்டது. ஏனோ தெரியவில்லை! வாசு பிறந்த நாள் முதற்கொண்டு, அவனிடமே தன் அன்பை யெல்லாம் சொரிந்தான். வீட்டில் அரைக் கணமும் அவனைப் பிரிந்திருக்க மாட்டான். “வாசு வாசு!” என்று காரியாலயத்துக்குப் போவதற்கு முன்பும், திரும்பி வந்த பிறகும், அவனிடம் சிரித்துப் பேசி, கொஞ்சி மகிழ்ந்து, சிறிது நேரமாகிலும் விளையாடாம லிருக்க மாட்டான்.

“வாசு நல்ல அதிர்ஷ்டக்காரன்! பெரிய பெரிய படிப்பெல்லாம் படித்து விட்டுப் பெரிய உத்தி

யோகம் பார்க்கப் போகிறான். அவன் அதிர்ஷ்டம் தான் எனக்கும் பதவியில் உயர்வு கிடைத்திருக்கிறது!" என்று பாலச்சந்திரன் மனைவி சாந்தாவிடம் சொல்லிப் பெருமை யடித்துக் கொள்வான்.

அப்பொழுதெல்லாம் சாந்தா அவன் வாயைப் பொத்தி விடுவாள்.

"போதும் போங்கள் இந்தப் பெருமை! இதற்கே இப்படிக் குதிக்கிறீர்கள். இன்னும் பெரிய வேலையாகி விட்டால், உங்களைக் கையில் பிடிக்க முடியாது. குறை காலத்துக்கும் இந்த அதிர்ஷ்ட மிருந்தால் போதும். என் கண்மணிகள் நன்றாயிருந்தால் போதும்" என்று சொல்லுவாள் சாந்தா. தன் குழந்தைகளைக் கட்டி யணைத்து முத்த மிடுவாள். இருந்தாலும் அவளுக்கும் உள்ளுக்குள்ளே பெருமைதான்.

இப்படி இன்பத்தில் திளைத்துப் போயிருந்த அவர்கள், துன்பம் இன்னதென்பதை யறியாது மற்றவர்கள் பார்த்து அசூயை கொள்ளும் அளவுக்குக் கவலையின்றி வாழ்ந்தார்கள்.

அப்பொழுதுதான் வாசு ஒரு நாள் ஜுரம் என்று படுத்தான். மறுநாளே அவன் கண்ணை மூடிவிட்டான். சமயத்தில் செய்த கைதேர்ந்த வைத்திய சிகிச்சை எதுவும் பயன்பட வில்லை.

பாலச்சந்திரன் குடல்மடை திறந்தாற்போன்று கண்ணீர் பெருக்கினான். "அந்தப் பாழும் கடவுளுக்குக் கண்ணில்லை. என் கண்ணைப் பறித்துக் கொண்டு விட்டானே!" என்று சிறு பிள்ளை போல் கோவென்று தேம்பித் தேம்பி யழுதான். அவன் மனம் சமாதானமடைய வில்லை. தன் உயிரே போனது போல உணர்ந்தான். வாசுவோடு ஒட்டி உறவாடி ஒன்றறக் கலந்து நின்ற பாசத்தினை அவனால் மறக்க முடியவில்லை. அன்று முதல் அவன் சோகத்தின் உருவானான்.

சாந்தாவின் பெற்ற மனம் பட்ட பாட்டைச் சொல்லி முடியாது. "கண்ணே, வாசு! இதற்குத்தானா உன்னை இவ்வளவு பாடுபட்டு வளர்த்து, சீராட்டிப் பாராட்டினேன்! என் ஆசைக் கனவில் மண்ணைப் போட்டு விட்டுப் போய் விட்டாயே!" என்று கதறினாள். பொல பொல வென்று கண்ணீர் வடித்தாள்.

"அம்பி இறந்து போய் விட்டானே! எனக்கு இனிமேல் யார் துணை!" என்று விமலா அழுதாள்.

கல கல வென்றிருந்த அந்த வீடு சோகம் நிறைந்து காணப்பட்டது.

சாந்தாவோ நாளடைவில் துக்கத்தை மறந்தவளாய்க் காணப்பட்டாள். பாலச்சந்திரனோ இதை எளிதில் மறப்பவனாய் இல்லை. மூன்று மாதத்திற்குக் காரியாலய வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்டு வீட்டிலேயே அடைந்து கிடந்தான் அவன். வாசுவின் விளையாட்டுப் பொருள்கள் ஒரு மூலையில் போட்டபடியே கிடந்தன. அவனுக்கென்று வாங்கி வைத்திருந்த ரேடியோவும் கவனிப்பாரற்று வாயை மூடிக்கொண்டு கிடந்தது.

ஓய்வு முடிந்து மீண்டும் பாலச்சந்திரன் காரியாலய வேலையைக் கவனிக்கச் சென்ற போதுகூட அவனிடத்தில் எவ்வித மாறுதல்களும் ஏற்பட வில்லை. முன் போல் உற்சாகம் பெற்றவனாக அவனில்லை. உண்பதோ, உறங்குவதோ, உத்தியோகம் பார்ப்பதோ எல்லாம் அவனுக்குப் பெரும் பாரமாக விருந்தன. ஒரு நடமாடும் இயந்திரப் பொறியாகவே அவன் விளங்கினான்.

சாந்தாதான் அவனுடைய கடமைகள் ஒவ்வொன்றையும் ஞாபக மூட்ட வேண்டியிருந்தது. வீட்டை விட்டால் காரியாலயம், காரியாலயம் விட்டால் வீடு என்றுதான் அவனிருந்தான். புத்தகம் படிப்பதோ, சினிமாவுக்குப் போவதோ, கடற்கரைக்குக் காற்று வாங்கப் போவதோ, நண்பர்களுடன் நெருங்கிப் பழகுவதோ எல்லாவற்றையும் அவன் மறந்தான்.

குறுகிய காலத்துக்குள், பாலச்சந்திரனோடு அன்புற வளர்ந்து இன்பமூட்டி, பின் அவனிடமிருந்து எல்லாவற்றையும் பறித்தெடுத்துச் செல்லத்தானா வாசு அவனுக்கு மகனாகப் பிறந்தான்! நிவர்த்தி செய்ய முடியாத மாறுதல்களைத் தந்தையிடத்து விளைவித்து விட்டல்லவோ வாசு அவனுக்கு மகனாகப் பிறந்தான்! நிவர்த்தி செய்ய முடியாத மாறுதல்களைத் தந்தையிடத்து விளைவித்து விட்டு வாசு மறைந்து போயிருந்தான்!

**வா**சுவின் நினைவு சாந்தாவின் உள்ளேதோற்றுவித்த வருத்தம் ஒரு பங்கானாலும், கணவனின் போக்கில் அவள் கண்ட தீராத மாறுதல்கள்தாம் அவளைப் பெரிதும் வருத்தின; வேதனை செய்தன. தன்னையே நொந்து கொள்வதைத் தவிர அவளுக்கு வேறு வழியில்லை. பாலச்சந்திரன் முன் போலவே கவலையை மறந்து, களிப்பு மிகுந்து, கலகலப்புடன் தன்னிடத்தும், விமலாவிடத்தும் அன்பு செலுத்திக் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான் அவளுடைய கவலை யெல்லாம். வாசுவின் மறைவுக்குப் பின் தனக்கே ஒரு ஆறுதலை அளித்துக்கொண்ட அவள், கணவனுக்கும் ஆறுதலளிக்கப் பின் வாங்கவில்லை.

"நீங்கள் இப்படி யிருப்பது எனக்குக் கொஞ்சமேனும் பிடிக்க வில்லை. வாசு நமக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். விமலாவைப் பாருங்கள். அவள் உங்கள் அன்பிற்காக ஏங்குகிறாள். அவளுடன் பேசுங்கள், விளையாடுங்கள். அவள்தான் நமக்கு இனி எல்லாம். வாசுவைப் பற்றிய நினைவை மறந்து விடுங்கள். என் பெற்ற வயிறு இதைச் சகித்துக் கொள்ளவில்லையா! எனக்குத் துக்கமில்லை என்று சொல்லிவிட முடியுமா! நான் இருக்கவில்லையா! யார் போனாலும், யார்






வந்தாலும், நாம் வாழ வேண்டுமே! என்னைப் பார்த்துச் சிரியுங்கள்; விமலாவைப் பார்த்துச் சிரியுங்கள்" என்று சாந்தா தன் பக்குவமடைந்த மனத்தினின்றும் கடைந்தெடுத்த புத்திமதிகளைக் கணவனுக்கு உற்சாக மூட்டச் சொல்லி வந்தாள். அவனிடம் அவள் கொஞ்சினாள்; கெஞ்சினாள்.

தன்னுடைய இதமான வார்த்தைகள் கணவனிடத்து நல்ல பயனை உண்டாக்கும் என்று அவள் நம்பினாள்; அவன் மனம் விரைவில் தெளிவு பெறும் என்று எதிர்பார்த்தாள்.

ஆனால் மனைவியின் வேதாந்தம் பாலச்சந்திரனுக்குப் பிடிக்கவில்லை.

நோயைத் தவிர்க்க உடம்பினுள் செலுத்தும் மருந்து, பயனைக் காட்டாது, பிணியை மேலும் அதிகரித்து விட்டால், என்ன நேருமோ, அப்படித்தான் சாந்தாவின் அன்பு மொழிகள் அவனுடைய துக்கத்தைக் கிளறிவிட்டு, அவனை அமைதி இழக்கும்படி செய்து விட்டன.

"சாந்தா, நீ என்ன சொன்னாலும் சரி. என் வாழ்வு வாசுவுடன் அஸ்தமித்துப் போய்விட்டது. வாசுவும் இனி வரப்போவதில்லை. நானும் முன் போல ஆகப்போவதில்லை. உனக்காகவும், விமலாவுக்காகவும்தான் நான் வாழ்கிறேன்; உழைக்கிறேன். மற்றப்படி என்னை ஒன்றும் தொந்தரவு செய்ய வேண்டாம்" என்று பாலச்சந்திரன் அடிக்கடி சாந்தாவிடம் விரக்தியோடு, பற்றற்ற துறவி போலப் பேசினான்.

சாந்தாவினால் இந்தக் கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவளுக்கும் அலுத்துப் போய்விட்டது. இப்படிக் கசப்புடனும், வெறுப்புடனும், எத்தனை நாளைக்குத்தான் வாழ்வது! இதை விட்டுச் சாவதா! அல்லது வாழ்வதா! அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை.

பாலசந்திரன் காரியாலயத்துக்கும், விமலா பள்ளிக்கூடத்துக்கும் போனபின், அவள் தனிமையில் உட்கார்ந்து கண்ணீர் வடித்தாள். "கடவுளே! என் வீட்டில் நிலவிய அமைதியைக் கூடவா எடுத்துக் கொள்ள வேண்டும்! தாயே, அம்பிகே! நீதான் கண் திறக்க வேண்டும். முன் போலவே வீட்டில் மகிழ்ச்சி நிறைய வேண்டும்" என்று அவள் சுவாமி படங்கள் முன் பிரார்த்தனை செய்து கொண்டாள்.

அவள் மனத்தில் அமைதியோ, ஆறுதலோ ஒரு சிறிதும் ஏற்படவில்லை.

மனித இனத்தின் சுக துக்கத்தையோ, இன்ப துன்பத்தையோ கவனியாது கவலையின்றிக் காலம் விரைந்தது. நாட்கள் பல உருண்டோடின: மாதங்கள் சிலவும் கழிந்தன.

*　　*　　*

**பா**லச்சந்திரன் வழக்கம்போல், மனக் கசப்புடன், கடமையாற்றக் காரியாலயத்தை நோக்கி வீட்டிலிருந்து சிறிது தூரமே வந்திருந்தான். அப்பொழுது வழியில் தென்பட்ட தபால்காரர் ஒரு உறையை அவனிடம் கொடுத்து விட்டுப் போனார்.

அவன் அதை மேலும் கீழும் திருப்பிப் பார்த்தான். அது ஒரு புதுமாதிரியான தோற்றத்துடனிருந்தது. அதன்மேல் அவனுடைய மேற் பார்வையுடன், சாந்தாவின் விலாசமிட்ட ஒரு சிறிய காகிதம் ஒட்டப்பட்டிருந்தது. அதற்கும் கீழே சாந்தாவின் தோழியான கமலாவின் பெயரும், அவள் வசித்த வீட்டின் இலக்கமும் தெருவும் எழுதியிருந்தன. அவன் மனைவியின் கையெழுத்தில்தான் அவைகளிருந்தன. ஆனால் அவள் கடிதம் போய்ச் சேர வேண்டிய ஊரின் பெயரை எழுத மறந்து விட்டிருந்ததினால், அது எங்கெங்கோ போய்த் தடுமாறி, கடைசியாக தட்டுக் கெட்டுப் போகும் கடிதங்களை, விலாசதாரிடமோ அல்லது அனுப்பியவரிடமோ சேர்க்கும் பணியை யாற்றும் "டெட்லெட்டர்" காரியாலயத்திலிருந்து, அவருக்குத் திரும்பி வந்திருந்தது. அதைத்தான் தபால்காரர் அவனிடம் கொடுத்திருந்தார்.

அவனுக்கு அதைப் பார்க்க ஆச்சரியமாயிருந்தது. கமலாவுக்குச் சாந்தா எத்தனையோ கடிதங்கள் இதுவரை எழுதியிருந்திருக்கிறாள். எந்தக் கடிதத்தையும் அவனுக்குத் தெரியாமல் அவள் எழுதியதல்ல. இப்படிப் புதுமையாக எழுதிய போது தான், விலாசத்தைச் சரியாக எழுத மறந்து விட்டிருந்தாள் அவள்.

அப்படி அவனுக்குத் தெரியாமல், கடிதத்தில் சாந்தா கமலாவுக்கு என்னதான் எழுதி யிருப்பாள் என்பதை அறிந்து கொள்ளும் ஆவலும் ஆசையும் அவனிடம் மிகுந்து காணப்பட்டன. கடிதத்தைப் பிரித்துப் படித்துப் பார்க்க அவன் தயங்கவில்லை.

"அன்புள்ள கமலா!

நீ ஏன் இப்பொழுது கடிதமே போடுவதில்லை. உன்னிடமிருந்து கடிதம் வந்தாலும் ஒரு ஆறுதலாயிருக்கும். என் அருமை வாசு எங்களை விட்டுப் போனாலும் போனான் எங்களையும் சனியன் பிடித்துக் கொண்டது. குடும்ப வாழ்க்கை எனக்குக் கொடும் வேதனையா யிருக்கிறது. அவரைப் பார்க்கச் சகிக்க வில்லை. அறையை விட்டு அவர் வெளியில் வருவதில்லை. வாசுவின் போட்டோவை எடுத்து வைத்துக் கொண்டு கண்ணீர் விட்ட வண்ணமே இருந்து வருகிறார். அவன் விளையாட்டுப் பொருள்களை ஏக்கம் நிறைந்த கண்



# ஏன் கிப்ஸ் உபயோகிக்கும் குழந்தைகள் அதிருஷ்டமுடையவர்கள்?

அதிருஷ்டமுடை-
யவர்கள்
ஏனென்றால்



அவர்களுடைய
பெற்றோர்கள் கிப்ஸ்
டென்டிபிரிஸ் வாங்குகிறார்கள்!

அதிருஷ்டமுடை-
யவர்கள்
ஏனென்றால்



அவர்கள் அதன்
சுவையை
அநுபவிக்கிறார்கள்!

அதிருஷ்டமுடையவர்கள்
ஏனென்றால்
கிப்ஸ் டென்டிபிரிஸ்
பற்களை வெண்மை
யாகவும் ஈறுகளை
ஆரோக்கியமாகவும்
இருக்கச்செய்கிறது!





நீலம்,
சிவப்பு,
பச்சை
டப்பிகளில்




## கிப்ஸ் டென்டிபிரிஸ்

**பற்களுக்கு சீரிய குணமளிக்கிறது—குறைந்த செலவில்!**

GD. 33-50 TM

டி. அன்டு டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

களால் பார்த்து, பெருமூச்சு விடுவது என் இதயத்தைக் கசக்கிப் பிழிகிறது. அவர் ஆண்பிள்ளை: எனக்குப் புத்தி சொல்ல வேண்டியவர்: அவரே இம்மாதிரி யிருந்தால், என் பெற்ற மனம் என்ன பாடுபடும்? என் உள்ளே மறைந்து கிடக்கும் வாசுவின் நினைவை, அவருடைய ஒவ்வொரு செய்கையும் என் முன்னே கொண்டு வந்து விடுகிறது. அம்மம்மா! என் இருதயம் வெடித்துப் போய் விடக் கூடாதா?

நானும், விமலாவும் அவருடைய அன்பிற்காக, ஆசை வார்த்தைக்காக நாளும் ஏங்குகிறோம். என் துக்கம் தீர, அவர் வெளியில் போய், வீடு திரும்பும் வரை, கண்ணீர் வடிக்கிறேன். நிம்மதி தான் ஏற்படுவதில்லை. இப்படியே இன்னமும் ஒரு மாதமிருந்தால், நிச்சயம் எனக்குப் பைத்தியம் பிடித்து விடும். அல்லது உயிரை மாய்த்துக் கொள்ளும்படித் தான் நேரிடும்.

எங்களுக்குத் தெரிந்த மனிதர்கள் என்று இருப்பவர்கள் நீயும் உன் கணவரும்தான். நீங்கள் ஒரு முறை இங்கு வந்து போனால் நல்லது. உன் கணவர் வார்த்தையை அவர் தட்டமாட்டார். அவர் முன் போல, கலகலப்பாக யிருக்க வேண்டும். இதுதான் நான் வேண்டுவது. என் துக்கத்தை நிறைய எழுத வேண்டும் போல் தோன்றுகிறது. எழுதத்தான் முடியவில்லை. உன் பதிலை ஆவலோடு எதிர்பார்க்கிறேன். உன் தோழி

சாந்தா

பின் குறிப்பு:— வழக்கத்திற்கு மாறாக, இதை அவருக்குத் தெரியாமல் எழுதுகிறேன்.''

கடிதத்தைப் படித்து முடித்தபோது, பாலச்சந்திரன் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்துகொண்டிருந்தது. துக்கம் தொண்டையை அடைத்தது. வாசு போனபின் தன்னுடைய ஒவ்வொரு செய்கையும் சரிதானா என்ற ஆராய்ச்சியில் அவன் மனம் இறங்கியது.

''பாவம், சாந்தா!'' என்று அவன் வாய் அவனையும் அறியாமல் முணு முணுத்தது.

''அவள் துக்கத்தை யெல்லாம் கடிதத்தில் கொட்டி யிருக்கிறாள். இந்த மன வேதனையில், விலாசம்கூடச் சரியாக எழுத மறந்திருக்கிறாள்'' என்று மனைவிக்காக அவன் இரங்கினான்.

''சாந்தாவை நான் வாட்டிக்கொண்டு வருகிறேன். விமலாவை ஏங்க வைக்கிறேன். நிச்சயம் இது கொடிய வேதனைதான். அவர்களுக்கு மட்டுமல்ல, எனக்குந்தான்.'' ஏதோ ஒருவிதத் தெளிவு அவனுள்ளே பளிச்சிட்டது. அப்பொழுதுதான் அவன் முகம் என்றுமில்லாத மலர்ச்சியுடன் விளங்கியது. கண்களில் ஒரு புத்தொளி வீசிற்று.

கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துத் தெரு மூலையில் எறிந்தான். ''கமலாவிடம் போய்ச் சேராது, திரும்பி வந்த கடிதத்தைப் பார்த்ததாக அவளிடம் சொல்லக் கூடாது. அது அவள் தோழியிடம் போய்ச் சேர்ந்ததாகவே யிருக்கட்டும்'' என்று எண்ணியவனாய்க் காரியாலயத்தைப் போய் அடைந்தான் அவன்.

வழக்கமாகச் செய்யும் வேலையில் பாலச்சந்திரனின் கவனம் சிறிதுகூடச் செல்லவில்லை. பல்லைக் கடித்துக்கொண்டு, மாலை மூன்று மணி வரையில் அங்கேயே தள்ளி விட்டான். அதற்குமேல் அவனுக்கு இருப்புக் கொடுக்கவில்லை. வீட்டுக்கு ஓடிப் போய்ச் சாந்தாவையும், விமலாவையும் பார்க்க வேண்டுமென்ற தணியாத ஆவல்தான் அவனிடமிருந்து காணப்பட்டது. மானேஜரிடம் சென்றான் அவன். ''தலையை வலிக்கிறது. வீட்டுக்குப் போக வேண்டும்'' என்று அவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, காரியாலயத்தை விட்டு அவன் வெளியேறினான்.

வீட்டுக்குப் போகும் வழியில், கடைத் தெருவில் அவன் நாலணாவுக்கு நல்ல மல்லிகைப்பூ கதம்பமாக வாங்கிக் கொண்டான். சோப்பு, ஸ்நோ, பவுடர், கூந்தல் தைலம் அது இது என்று இது வரையில் வெறுத்து ஒதுக்கிவைத்திருந்த பொருள்களை யெல்லாம் நிறைய வாங்கிக் கொண்டான். விமலாவுக்குத் தின்பண்டங்களும் வேண்டிய மட்டும் வாங்கிக் கொண்டான். வீட்டில் போய்த் தான் நின்றான் அவன்.

மாலை ஐந்து மணிக்கு வீடு திரும்பும் கணவன் வழக்கத்திற்கு மாறாக, நாலுமணிக்கே வந்தது சாந்தாவிற்கு ஆச்சரியமாக யிருந்தது. ''என்னவோ, ஏதோ'' என்ற பயமும் அவளுக்குக் கூடவே தோன்றியது.

''ஏன் அதற்குள் திரும்பி விட்டீர்கள்!'' என்று அவள் கவலை தொனிக்கக் கேட்டாள்.

''இன்றைக்குச் சீக்கிரமாகவே வேலை முடிந்து விட்டது. வந்து விட்டேன்'' என்று கூறி அவன் முக மலர்ச்சியுடன் சிரித்தான். வாங்கி வந்த பொருள்களை அவள் முன்னே மேஜையின் மேல் வைத்தான். சாந்தாவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. ஆச்சரியத்தினால் வாயடைத்துப் போனாள். அவள் உள்ளம் மகிழ்ச்சியினால் விம்மிப் பருத்தது.

''வா, அம்மா, விமலா!'' என்று அவன் அடுத்தபடியாக மகளை அணைத்து உச்சி மோந்து முத்தமிட்டான். சிறுமி விமலா ஒன்றும் புரியாமல்



## பிரபல திருமணம்

*

கொச்சி சமஸ்தானம் கொடுங்கல்லூர் ஸ்ரீ மடம் சி. கே. சுப்பிரமணிய அய்யர் பி. ஏ. பி. எல்., அவர்களின் குமாரர் ஸ்ரீ என். கிருஷ்ணன் B. Sc. (Eng) அவர்களுக்கும், விஜயவாடா, ஆந்திரா பவர் ஸிஸ்டம், சூப்பிரண்டெண்டிங் இன்ஜினியர் ஸ்ரீ பி. ஏ. கிருஷ்ணன் அவர்களின் குமாரி சௌ. மீனாவுக்கும் சமீபத்தில் திருச்சூரில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!

விழித்தாள். இத்தனை நாட்களாக முகத்தை 'உம்' என்று வைத்துக் கொண்டு, தன்னிடம் பராமுகமாயிருந்த தந்தை, இன்று தன்னைப் பார்த்து அனுசரணை காட்டுவது கண்டு, அவளுக்கும் மிக்க மகிழ்ச்சிதான் ஏற்பட்டது. துள்ளித் துள்ளி, குதித்துக் குதுத்து, இங்கு மங்குமாக ஆடி விளையாட ஆரம்பித்து விட்டாள் அந்தச் சிறுமி. அவள் செய்கையை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தான் பாலச்சந்திரன்.

மூடிக்கிடந்த ரேடியோவைத் தூசி தட்டித் துடைத்துத் திருகிவிட்டான் அவன். ரேடியோ இன்னிசைக் கானம் பொழிந்தது. தன் மனம் குளிர்ந்ததுபோல் சாந்தா உணர்ந்தாள்.

"சாந்தா, நாழியாகிறது! சீக்கிரம் கிளம்புங்கள். சினிமாவுக்குப் போய் வரலாம். நல்ல படம் வந்திருக்கிறதாம்" என்று மனைவியை அவசரப் படுத்தினான் அவன். இது சாந்தாவின் காதுக்கு இனிமையாக இருந்தது. இந்த மகிழ்ச்சியினிடையே துக்கத்தின் சாயலும் அவளிடம் இல்லாமற் போகவில்லை.

"வாசு இல்லாமல் சினிமாவுக்கா! நான் வரவில்லை. நீங்களும் விமலாவும் போய் வாருங்கள்" என்று சொல்லும்போது சாந்தாவின் கண்கள் கலங்கி விட்டன. இப்படி சொல்ல வேண்டாம் என்றுதான் நினைத்தாள்; ஆனாலும் அவள் சொல்லியே விட்டாள்.

"சாந்தா, வாசுவின் ஆன்மா சாந்தியடைந்து விட்டது. அழுது புரண்டாலும் அவன் வரப் போவதில்லை. அவன் நமக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். அவன் ஞாபகம் நம் உள்ளத்தில் இருக்கும். அவன் தெய்வமாகிவிட்டான். நம் துக்கத்தை அவன் அகற்றிவிடுவான். எல்லாம் முருகன் அருள்!" என்று பாலச்சந்திரன் இப்பொழுது வேதாந்தம் பேசினான்.

"அப்பா, இப்போதுதான் என் மனம் குளிர்ந்தது. சரி போகலாம் வாருங்கள்!" என்று கூறிவிட்டு அவசர அவசரமாகப் பூஜை அறைக்குள் நுழைந்தாள். தன் கவலையை நீக்கிய கருணா மூர்த்தியை நோக்கிப் பிரார்த்தனை புரிந்தாள். அவள் உள்ளத்திலே வாசுவின் உருவம் பதிந்திருந்தது. இதைப் பார்த்த பாலச்சந்திரன் மகிழ்ந்து போனான். இதற்குப் பிறகு சாந்தாவின் கண்களில் என்றுமில்லாத ஒருவித புத்தொளி இப்பொழுது ஏற்பட்டது.

சினிமாவுக்குப் போவதைத் தன் தோழிகளுக்குச் சொல்லிப் பெருமையடித்துக் கொள்ள விமலா தெருப் பக்கம் ஓடினாள்.

"இருங்கள்! இதோ காப்பிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு மகிழ்ச்சி பொங்கும் உள்ளத்தோடு சாந்தா உள்ளே போனாள்.

பாலச்சந்திரன் தனக்குள்ளே சிரித்துக் கொண்டான். அவன் பார்வை சுவரில் ஓவிய உருவில் காட்சியளித்துக் கொண்டிருந்த வாசுவின்மேல் பதிந்தது. அதே சமயம் அவனிடத்தே ஒருவிதத் தெளிவும் ஏற்பட்டது.

வாசு தகப்பனைப் பார்த்து, கண் சிமிட்டி, கள்ளங் கபடமின்றி, சிரித்தான்!

## சோஷலிஸக் கட்டுரைக்கு நூறு ரூபாய் பரிசு

"சோஷலிஸம் ஏன் வேண்டும்!" என்னும் தலைப்பில் எழுதப்படும் கட்டுரைகளில் சிறந்தது என்று ஆசிரியர் கருதும் கட்டுரைக்கு ரூபாய் நூறு பரிசு வழங்கப்படும். கட்டுரை, வாசகர்கள் ரஸித்துச் சுவையுடன் படிக்குமாறு எளிய தமிழில் அமைந்திருக்க வேண்டும்.

சோஷலிஸ இயக்கத்தின் அடிப்படைத் தத்துவங்கள், சோஷலிஸத்தினால் பாரத தேசம் அடையக் கூடிய நன்மைகள், இந்திய சோஷலிஸ்ட் கட்சியின் முன்னணி வேலைத் திட்டம், அக் கட்சியின் தற்போதைய நிலை, கட்சியை வலுப் படுத்துவதற்குரிய யோசனைகள், சோஷலிஸ்ட் இலட்சியத்தையும் வேலைத் திட்டத்தையும் மக்களிடையே பரப்புவதற்குச் சிறந்த வழிகள்,—இவை யெல்லாம் போட்டிக் கட்டுரைக்கு விஷயமாக அமையலாம். இவற்றில் ஏதேனும் சில அம்சங்களைப் பற்றியும் எழுதலாம்.

கட்டுரை, "கல்கி" இதழில் நாலு பக்கங்களுக்குக் குறையாமலும் எட்டுப் பக்கங்களுக்கு மேற்படாமலும் இருக்க வேண்டும்.

பரிசு பெறும் கட்டுரையைத் தவிர, பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் நல்ல கட்டுரைகளுக்கு உசிதம் போல் சன்மானம் வழங்கப்படும்.

சகல எழுத்தாளர்களுக்கும் அதிக அவகாசம் அளிக்கவேண்டும் என்பதற்காகவே, கட்டுரைகளை அனுப்பும் முடிவு தேதியை ஜூன் 30உ லிருந்து ஜூலை 31-ம் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

## இதைப்போன்ற டூத் பிரஷ் வேறில்லை!

**உங்களுக்கேற்றடிசைன்! உங்கள் வாய்க்கு பொருத்தமானது!**

பற்களை உறுதிப்படுத்தும் புது அம்சங்கள்

- முற்றிலும் ஸ்டரிலைஸ் செய்யப்பட்டது
- கால்கேட் டூத் பிரஷ்களின் ஹாண்டில்கள் தனி வர்ண முள்ளவை; உங்களுக்கு ஏற்றதை லகுவில் அறியலாம்
- பிளாஸ்டிக் ஹாண்டிலில் நிஜ நைலான் நார்கள்
- மிருதுவாக பாலிஷ் செய்கிறது; இனாமல் சிதையாது
- பல் ஈறுகளை மிருதுவாகத்தடவி உறுதிப்படுத்துகிறது



குழந்தைகளுக்கு



ஸ்திரீ களுக்கு



ஆண் களுக்கு




2 சைஸ்கள்
பெரியவர்களுக்கு குழந்தைகளுக்கு
ஹார்ட், மீடியம், சாப்ட் டப்ட்ஸ்

# கால்கேட்

## நைலான் டூத் பிரஷ்

### "துவண்டு" போவதில்லை

---

# லிப்டன்




## டீ கெர்ல்
## டஸ்ட்
## டீ




*சிறந்த ஸ்டிராங் டீ*
*தருகிறது.*

# ஐரோப்பாவில் உருவான புதிய நாடு

**ஜெயமணி**

(சென்ற வாரத் தொடர்ச்சி)

ஆனால் ஜான் மசாரிக்கின் மரணம் உண்மையில் அரசியல் கொலை என்றே விஷயம் அறிந்த பலரும் கூறினர்.

பிறகு கம்யூனிஸ்டுகள் தயாரித்த செக்கோஸ்லோவேகியா அரசியல் திட்டத்தில் கையெழுத்திட முடியாது என்று கூறி ஜனாதிபதி பெனிஸ் தமது பதவியை ராஜிநாமா



விசித்திர உடை தரித்த செக் நாட்டுப் பெண்கள்

செய்தார். அதன் பின் சில மாதங்களில் பெனிஸின் ஆவியும் பிரிந்தது.

செக்கோஸ்லோவேகியாவை உருவாக்குவதில் முக்கிய ஸ்தானம் வகித்த ஜான் மசாரிக்கும், எட்வர்ட் பெனிஸும் பரிதாபகரமாக மரணமடைந்தது உலக நாடுகளில் மிகுந்த மனக் கொதிப்பை உண்டு பண்ணியது.

எட்வர்ட் பெனிஸ் அரசியலில் பிரவேசிக்கு முன், சர்வ கலாசாலைப் பேராசிரியராக இருந்தவர். அவர் பல அரிய நூல்களும் எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது.

பழைய ஆஸ்திரியாவில் இருந்த தொழிற்சாலைகளில் முக்கால் பாகம் செக்கோஸ்லோவேகியாவுக்குக் கிடைத்து விட்டதால் தொழில் துறைகளிலும் அந்த நாடு ஐரோப்பாவில் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது.

எனினும், அது எவ்வளவு முக்கிய ஸ்தானம் வகித்தாலும், அந்த நாடு பிற நாட்டின் உதவியும் ஒத்துழைப்புமின்றித் தனியாக நிற்பது முடியாத காரியம்.

ஏனெனில் செக்கோஸ்லோவேகியா உருவத்தில் மிகச் சிறியது. அந்த நாட்டுக்குக் கடற்கரை இல்லை. அதைச் சூழ்ந்து ஜெர்மனி, போலந்து, ருமேனியா, ஹங்கேரி, ஆஸ்திரியா முதலிய தேசங்கள் இருப்பதால், அவற்றின் தயவு இல்லாமல் செக்கோஸ்லோவேகியாவின் வர்த்தகப் போக்குவரத்து நடைபெறுவது முடியாத காரியம்.

செக்கோஸ்லோவேகியாவைச் சேர்ந்திருந்த ஐயாயிரம் சதுர மைல்கள் உள்ள ருதேனியா சென்ற மகா யுத்தத்துக்குப் பின் ருஷ்யாவைச் சேர்ந்து விட்டது. எனவே, ருதேனியாவைச் சேர்க்காமல் செக்கோஸ்லோவேகியாவின் விஸ்தீரணம் நாற்பத்தொன்பதாயிரம் சதுர மைல்கள் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

அந்த நாட்டின் ஜனத் தொகை ஒன்றரைக் கோடி ஆகும்.

ஐரோப்பாவில் உள்ள சில நாடுகளைப் போல் செக் நாட்டிலும் சிறுபான்மையோர் பிரச்னை இருந்து வருகிறது.

அந்த நாட்டின் மொத்த ஜனத் தொகையில் 67 சத விகிதம் பேர்தான் செக்கோஸ்லோவேகியர்கள், ஜெர்மானியர், ஹங்கேரியர், ருதேனியர், யூதர் முதலிய எல்லோருமாக 33 சத விகித ஜனங்கள் இருக்கிறார்கள்.

எனினும் செக் நாடு அங்குள்ள சிறுபான்மையோர் விஷயத்தில் ... ருமேனியா, ஹங்கேரி

அந்த நாட்டின் சொந்த மக்களான செக்கோஸ்லோவேகியர்களைப் போலவே அங்குள்ள சிறுபான்மையோருக்குச் சம உரிமைகள் அளிக்கப்படுகின்றன.

ஆனால் சென்ற மகா யுத்தத்தின்போது சிறுபான்மையோர் செக் நாட்டிடம் விசுவாசமாக நடந்து கொள்ளவில்லை என்பது செக் சர்க்காரின் அபிப்பிராயம்.

எனவே, சென்ற மகா யுத்தத்துக்குப் பிறகு செக் சர்க்கார் தங்கள் நாட்டில் உள்ள இருபது லட்சம் ஜெர்மானியர்களை ஜெர்மனிக்கும். எட்டு லட்சம் ஹங்கேரியர்களை ஹங்கேரிக்கும் அனுப்பிவிட வேண்டும் என்று ஐக்கிய நாடுகள் சபையிடம் விண்ணப்பம் செய்து கொண்டனர். மேற்படி சபையும் அக்கோரிக்கைக்கு இணங்கியது.

உலகத்தில் உள்ள சிறந்த ஜனநாயக அரசியல் திட்டங்களில் செக் நாட்டின் திட்டமும் ஒன்று. சென்ற மகா யுத்தத்துக்குப் பின் செக்கோஸ்லோவேகியாவின் அரசியலில் ஒரு முக்கியமான சீர்திருத்தம் செய்தனர். அதாவது நாலு கட்சிகளுக்கு மேல் அந்த நாட்டின் தேர்தல்களில் கலந்து கொள்ளக் கூடாது என்பதுதான் அச் சீர்திருத்தம் ஆகும்.

அதிகக் கட்சிகள் இருந்தால் பிரான்ஸ் தேசத்தைப் போல் ஜனங்களின் வோட்டுகள் சிதறிவிடும்; மந்திரி சபை நித்திய கண்டமாக வாழும்படி நேரும் என்றே செக் நாட்டுத் தலைவர்கள் தங்கள் தேச அரசியலில் அத்தகைய சீர்திருத்தம் செய்துள்ளனர்.

* * *

செக்கோஸ்லோவேகியாவில் நிலக்கரி கிடைக்கும் இடங்கள் ஏராளமாக இருக்கின்றன. அந்த நாட்டின் சுரங்கங்களிலிருந்து யுரேனியம், தங்கம், வெள்ளி, ஈயம், துத்தநாகம், முதலியவை கிடைக்கின்றன.

செக்கோஸ்லோவேகியா தலைநகரின் ஒரு பகுதி





உலகப் பிரசித்திபெற்ற பேட்டா தொழிற்சாலை

செக் நாட்டில் ஏராளமான இயற்கை ஊற்றுகள் இருக்கின்றன. எனவே உலகில் பிரசித்தி பெற்ற பல ஆரோக்கிய வாசஸ்தலங்கள் அந்த நாட்டில் அமைந்திருக்கின்றன.

செக் நாட்டில் முக்கியமான ஏரி எதுவும் இல்லை. எனினும் அதன் மலைப் பிரதேசங்களில் மிகவும் உபயோகமான சிறிய ஏரிகள் ஏராளமாக இருக்கின்றன.

அங்கு உற்பத்தியாகும் உணவுப் பொருள்களில் பார்லி, கோதுமை, சோளம் முதலியன முக்கிய மானவை. இவற்றைத் தவிர செக் நாட்டில் ஏராளமான பழங்களும் உற்பத்தியாகின்றன. எனவே, தனக்குத் தேவையான உணவுப் பொருள்கள் போக எஞ்சியிருப்பதை அத்தேசம் வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்ய முடிகிறது.

யந்திர உற்பத்தியிலும் செக் நாடு பிரசித்தி பெற்று விளங்குகிறது. பெரிய யந்திரங்கள், யுத்த சாதனங்கள், பாதரக்ஷைகள், துணி இவற்றின் உற்பத்தியும் அந்த நாட்டில் அதிகமாகும்.

செக்கோஸ்லோவேகியாவில் உள்ள பில்சன் நகரில் இருக்கும் ஸ்கோடா போர்த்தளவாடத் தொழிற்சாலையும், ஸ்லின் நகரில் உள்ள பேட்டா செருப்புத் தொழிற்சாலையும் உலகப் பிரசித்தி பெற்றவை.

கல்வியிலும் அந்த நாடு நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து வருகிறது.

* * *

செக் நாட்டின் தலைநகராக விளங்கும் பிரேகில் எட்டரை லட்சம் ஜனங்கள் வசிக்கிறார்கள். மால்டாவ் நதியின் இரு கரைகளிலும் அமைந்திருக்கும் பிரேக் நகரில் உள்ள அற்புதமான கட்டிடங்கள் அந்நகரில் உள்ள விசேஷ அம்சமாகும். 1381-ம் வருஷத்தில் நிர்மாணிக்கப்பட்ட பழைய நகர மண்டபம் இன்னும் அந்நகரில் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது.

சரித்திரப் பிரசித்திபெற்ற பல ஞாபகச் சின்னங்களும் பிரேக் நகருக்கு அலங்காரமாக இருந்து வருகின்றன.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது

டால்டாவிலிருந்து பெறும் சக்தியால் இவன் ஆரோக்கியமாகவும் நாள்முழுவதும் குதூகலமாகவும் இருக்கிறான்.

உங்கள் குடும்பத்தினருக்கு டால்டாவில் தயாரித்த உணவை அளியுங்கள். இப்படிச் செய்வதால், டாக்டர்கள் ஒவ்வொருவர் தினசரி உணவிலும் அவசியம் தேவை என்று கூறும் சக்தியளிக்கும் கொழுப்பு அவர்களுக்குக் கிடைப்பதை உறுதிப்படுத்திக் கொள்கிறீர்கள். காற்றுப்புகாத ஸீல்செய்த டின்களில் அடைக்கப்பட்ட டால்டா மிகவும் சுத்தமானது, புதிதானது, ஆரோக்கியமானது. மேலும் மிகவும் சிக்கனமானது.

நமது உணவில் விட்டமின்கள் ஏன் அடங்கியிருக்க வேண்டும்?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா

உங்களை ஆரோக்கியமாக வைத்திருக்கும் சமையல்-கொழுப்பு

10, 5, 2, 1, பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 190-50 TM

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

# அழகின் ஆதாரம் உங்கள் சருமம் தான்



உங்கள் வதனத்திற்கு
பாதுகாப்பும், அழகும்
அளியுங்கள்

வெப்பம், குளிர், ஈரம், வறட்சி, வெய்யில், புழுதி இவைகளிலிருந்து தான் நம் நாட்டில் உங்கள் சருமத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். மிதமிஞ்சிய சீதோஷ்ண நிலைகளிலிருந்து உங்கள் சருமத்தை பாதுகாத்து அழகுபடுத்துவதற்கென்றே ஹிமாலயா புக்கே ஸ்னோ பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது. அதை தினமும் உபயோகித்து உங்கள் சருமத்தை மென்மையாகவும் தெளிவாகவும் வைத்துக்கொள்ளுங்கள். பௌடர் பூசிக்கொள்வதற்குமுன் அதை உபயோகிக்க மிகவும் பிரியப்படுவீர்கள். நீங்கள் அதன் நறுமணத்தையும் விரும்புவீர்கள்.






## ஹிமாலயா புக்கே ஸ்னோ

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBS. 9-50 TM

இராஸ்மிக் கம். லிட்., [illegible] இலங்கைக்காக இந்தியாவில் தயாரித்தது